# SULOCHANA SATHI

A
PURANIC
TAMIL
BY
T. T. Sankara

புகழ்பெற்ற தமிழ்
ஸ்ரீலஸ்ரீ T. T. சங்கரதாஸ் சுவாமி
அவர்களால் இயற்றப்பெற்ற

# சுலோசனாஸதி

(ஆனந்த ராமாயணப் பகுதி)



மதுரை, வித்துவான்
மு. திருமலைமுத்துப் பிள்ளை அவர்களால்
பார்வையிட்டு,

மதுரை, தாசில்தார் பள்ளிவாசல் தெரு,
கு. மாயாண்டி பிள்ளையால்
தமது
மதுரை, வடக்குமாசிவீதி
மனோன்மணி விலாசம் அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

1927. [அணா 12.



உ

வேலுமயிலுந்துணை.

# சுலோசனா ஸதி.



## விநாயகர் துதி.

### வெண்பா.

ஓங்கும் புகழ்சதிசு லோசனா வொண்கதைக்கிங்
கோங்கன் முகமு மொருமருப்புந்—தாங்கிநின்று
சங்கரன் றன்முடிமேற் றண்ணிலா வைப்பொருத்தும்
ஐங்கரன் றாட்டுணையே யாம்.

## ஸீன் 1.

காலம்— முற்பகல்.
இடம்— நாகலோக நந்தவனம்.
பாத்திரங்கள்— இந்திரசித்து, தோழன் சுலோசனா தோழிகள்.

### இந்திரசித்துப் பாடல்.

வந்தேன் வந்தன முன்னரசுக்கு - என்ற வர்ணமெட்டு.
இ-ம்-ஸ்ரீராகம்-தா-ம்-ரூபகம்.

பல்லவி.

எங்கெங்கும்பிர சித்தனாஇந்திரசித்தன் இலங்
கேசன் சிரேஷ்ட புத்திரன்

அநுபல்லவி.

அங்கங்கும் வென்று காணிக்கைவாங்கி
அமரரொடு மகபதியை யவதிபுரி ஜெயவிஜயன். (எ)

சரணம்.

அன்னைவயிற்றில்நின்றுதித்திட்டபோது அழுமென்குரலொலி
யாலேமேகங்க ளாகாயத்தில் நில்லாது அதிர்ந்தாண்டு நடுங்கி
மின்னொடும் புவியில் விழுந்திட்ட போது கொண்டு விரியுமுலகர்
மேகநாதனென்று பேரிட்டாரப் போது பின் வேதனென்தவத்தா
லுன்னும் வரந்தந் ததற்கொப் பேது
உற்றலென் னஸ்திர சாஸ்திரந்தப் பாது
இன்னுஞ் சொல்வகை யேது சொன்னேனிது தவறாது
எதிர்வந்தமர் புரிகின்றவ ரெவருண்டொரு வருமிங்கிலர் (எ)

வசனம்:— தோழா! எட்டுத் திக்குப்பாலர்களையும், மத்திய லோக ராஜர்களையும் வென்று திக்கு விஜயம் புரிந்து, இந்த நாக லோகத்திலும் பிரவேசித்துக் காணிக்கைகளைப் பெற்றோம், இந்தப் பூங்காவோ தேவலோகக் கற்பகச் சோலைக்கு மேலாகக் காணப்படுகின்றன.

பாட்டு.

மிகவிலை பெறுகிற வகை - என்ற மெட்டு.

இ-ம்-மோகனம்-தா-ம் ஆதி.

பல்லவி.

கற்பகவனமிதற் கொப்பெனச் சொல்லுவது
தப்பிதமாக முடியும் இந்திரலோக (கற்)

560

அநுபல்லவி.

அற்புதமிது போலே அவனியிற் கிடையாது
ஆனு லிங்கு வர்ணிக்க ஆகாது வமையேது. (கற்)

சரணம்.

ஆதவனொளிபுக இலை நெறியும் அதனால் மிகுதியதாய்
சீதள நிலைபெறு குளிர்செறியும் கண்டோர்களெல்லாம்
ஆசையி னோடிருந்து வசிக்கவே நினைப்பார்
அகன்று போகவுமுடி யாதுளந் திகைப்பார்
பேசுங்கிளி மொழிகள் பேணியும் வியப்பார்
பிரியமுரியவிட மருமையி தென்றுரைப்பார். (கற்)
மலர்களெங்கும் புஷ்பித்து மணங்கூடி யொருமித்து
வருதல் கண்டுபிரமித்து மனமுஞ் சந்தோஷித்து
மாலய·னாானுறைபிட மிதுவோ கானகந்தருவர்
போல்பவ ருறைவிட மலதெதுவோ தெரியவில்லை
மாரனுக்குரிய அஸ் திரசாலை போலே
வனப்புமிகுந்துகாட்சி யாகுமென் மேலே
சீரிதனை வர்ணிக்க ஆமோ என் னாலே
சேடனும் சொல்ல அஞ்சுவா னீராயிர நாவினாலே. (கற்)

தோழன் பாட்டு.

நாலாம் யுகக்கலியின் பெருமை - என்ற மெட்டு.

இ-ம்-நாத நாமகிரியை தா-ம்-ஆதி.

பல்லவி.

பூவின் விபரம் பலகோடி நல்ல
புதுமை புதுமை யெவர் போதிப்பர் தேடி

அநுபல்லவி.

காவில் மரங்கொத்துச் செடிகொடி நீர்ப்பூ
கரும்பு வெண்பு பசும்பு இரும்பொடு வெறும்பூ. (பூ)

சரணம்.

வம்பு விசும்பு புலம்பு விளம்பு மாரி காலமும்
மடங்குகால் நரம்பு சம்பு தசும்பு விரும்பு குறும்பு
தண்ணீர் முடிக்கலுற்ற வெங்கலச் செம்பு
அப்பு கலப்பு பதைப்பு கொதிப்பு
தக்கபண மிருந்தால் உலகினில் மதிப்பு
செப்பு அருப்பு இருப்பு நெருப்பு
தினம் நெய் யொடு புசிக்கும் துவரையின் பருப்பு
உப்பு உரப்பு கசப்பு புளிப்பு
உற்ற நேசரைக் காணில் மனதினில் களிப்பு
இத்தனை பூவிற்குமேல் இரவின் கண் விழிப்பு
இயம்பிய மொழி யெல்லாம் தமிழ்ப் புத்தகக் குறிப்பு (பூ)

வ-ம்— சரி சரி எத்தனை நாள் வர்ணித்தாலும் முற்றும் முடிவுபோகாது, நாமும் புறப்பட்டு வெகு நாளாயின, தாய் தந்தையரும் நமது வரவை வெகு ஆவலோடு நோக்கிக்கொண்டிருப்பார்கள். ஆகையால் நான் இரண்டு தினங்களில் வந்து சேருவதாக நீ முன்பு இலங்கைக்குப் போய் அவர்களுக்குச் சொல்லு, நான் இவ்வன விநோதங்களைப்பார்த்துத் தேக சிரமத்தை நீக்கிக் கொண்டு நாளை யன்றையத்தினம் அங்குவந்து சேருகிறேன் ஜடுதியாகப் புறப்பட்டுப்போ.

## சுலோசனை வருகை.

### நந்தவனப்பாட்டு.

பாங்கிக்கலாவதி கேளடி - என்ற மெட்டு.

இ-ம்-காபி-ஏகதாளம்.

பல்லவி.

வாருங்கள் மாமலர் கொய்யலாம்
மாலை செண்டு பந்து செய்யலாம்

அநுபல்லவி.

நேரும் சகி நீங்க ளென்னொடு
நேசமிருந்திடு மன் பொடு
நீங்காமலே மகிழ்ந் தின்பொடு. (வா)

சரணம்.

மல்லிகைபிச்சி செண்பகம் தேவதாரம்
வாசமிகுந்த ஜாதி ரோஜா மந்தாரம்
முல்லை யிருவாட்சி கொன்றைமகி ழாரம்
முற்று மலர்ந்துமணம் வீசுதிந் நேரம் (வா)

நந்தியா வட்டை குண்டுமல்லி சாமந்தி
நாகமல்லி யந்திமந்தாரை செவ்வந்தி
விந்தையா யெங்கும் மதுவைச் சிந்திச் சிந்தி
வேடிக்கையாக விளங்கும் பந்தி பந்தி (வா)

வ-ம்:— சகிகாள்! நீங்கள் நாலு பக்கங்களிலும் சென்று இன்று நமக்கு வேண்டிய அலங்காரங்களுக்கும், விளையாடல்களுக்கும்உபயோகப்படுவதற்குரிய மலர்களைக் கொய்துகொண்டு வாருங்கள் நீங்கள் வருகிறவரை நான் இந்தத் தேமாவில் படர்ந்திருக்கிற மல்லிகைக் கொடியின் விநோதக் காட்சியைப்பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

**மதனவல்லி:—** அடி சிங்காரவல்லி இவள் இந்தக் கொடிபடர்ந்த காட்சியைப் பார்த்துக்கொண்டு நிற்கிறேனென்ற காரணம் உனக்குத் தெரியுமா?

**சிங்காரவல்லி:—** என்னடி அது?

**மத-லி:—** மணப்பெண் புருஷனைத் தழுவுவது போலே மல்லிகைக் கொடி புஷ்பித்துத் தேமாவில் படர்ந்திருக்கிறது இவள்எவ்வண பருவத்தினள் ஆகையால் நாமும் கூடிய சீக்கிரத்தில் இப்படிப்புருஷனைத் தழுவக் கொடுத்துவைத்திருக்கோமா? என்று பெருமூச்சு விடுகிறுள் பார்.

**சு-லி:—** போடி! உனக்குத்தாண்டி அப்படிப்பட்ட எண்ணம் உண்டு, புருஷனை யெப்போது கட்டித் தழுவுவோம், கட்டித் தழுவுவோம்? என்று எண்ணி, யெண்ணி, ஏங்கிக்கொண்டிருக்கிறுய் ஏது என் சமாசாரம் தெரியவில்லையோ?

சிங்-ஸி— அம்மா! கோபித்துக்கொள்ளாதே இவள்வேடிக்கையாகச் சொன்னளே யன்றி வேறில்லை, நீ யிங்கேதானே விநோதக் காட்சி பார்த்துக்கொண்டிரு நாங்கள் பரிமள சோபித மலர்களைக் கொய்துகொண்டு வருகிறோம்.

(போகிறார்கள்.)

## இந்திரசித்து வர்ணிக்கிறான்.

பாட்டு.

பொன்னுலவு சென்னிகுல — என்ற மெட்டு.

இ-ம்-செஞ்சுருட்டி-தா-ம்-சாப்பு.

கண்ணி.

ஆயிர நாவைப் படைத்த ஆதிசேடனுமிவ
ளங்கமுழுதும் வர்ணிக்க லாகுமா ஒளிர்
திங்களே முகந்தனக் கொப் பாகுமா சிலை
அம்பு போல்விழி வெந்தபால் மொழி
விந்தைசேர் குழல் கொண்டலா மென
அன்புமீறி நின்றுரைக்க லாகுமா ஆனல்
முன்புகூறி நின்ற பிழை போகுமா

சாயலே நடனமாடு மாமயில் போலேயுலாவுந்
தந்த பந்திகட்கு முல்லை நாணிடும் கொங்கை
வந்த தந்திக் கும்பமெனத் தோணிடும் நச்சுச்
சர்ப்பப் படமது உற்ற கடிதட
மற்றுமு வமைக ளற்ற கொடி யிடை
ஜால வித்தைக் காரர்தொழில் காட்டிடும் நடை
காலெடுத்தா லன்னமதை யோட்டிடும்

கோதிலாத ரூபசித்ர மாதுகாது வள்ளை யென்று
கூற லாகும் வேறுவமை யில்லையே நுதல்
சீறுமாரன் கையிலுள்ள வில்லையே மிகு
கோலமேவிய பாத தாமரை
சேர நாடுவர் காணு மாடவர்
கொஞ்சமல்ல மிஞ்சுமய லஞ்சுவார் மலர்,
பஞ்சணையிற் கொஞ்செனவே கெஞ்சுவார்

# சுலோசனை

## இந்திரசித்துவைக் கண்டு வர்ணிக்கிருள்

பாட்டு.

வாருமையா இதுவே நற்காலமே – என்ற மெட்டு.

இ-ம்-இந்துஸ்தான் காப்பி. தா-ம்-ஆதி.

பல்லவி.

இவன் — திவ்ய அலங்கார சுந்தரன் பல
தேவர் பணியுந் தெய் வேந்திரன்

அநுபல்லவி.

செவ்ய நற்குணன் சீருள்ள சற்சனன்
தேறும் விற்பனன் கல்வியிலே தேறும்
இப்போது யோக மானேன் (திவ்)

சரணம்.

பெண்கள்கொள் ளாவலன் பிரசங்க நாவலன்
பேணுங் காவலன் இவ்வுலகைப் பேணு
காம லீலை வல்லவன் இவன் (திவ்)

வேறு.

## இந்திரசித்துக்கும் சுலோசனைக்கும் தர்க்கம்.

பாட்டு.

காமேலே யெல்லாம் – என்ற மெட்டு.

இ-ம்-பியாகு - தா-ம-ஆதி.

இந்தி— கண்ணி.

சோலைக் கிளிபோ லுலாவி வருகின்ற
சுந்தரியே மனோ ரஞ்சிதமே
ஞாலத்திலுன் பேரைக் கேட்க விரும்பினே
னுனெனக்குச் சொல்வா யவ் விதமே.

வ-ம்— ஹே மனோகர மாதே! உன் நாமதேய மென்ன?

சுலோ— பாட்டு.

சுற்றிலு முள்ளவ ரென்னை யெந்நாளுஞ்
சுலோசனை யென்றழைப் பார்கள் மன்னு
உற்ற வுமையுந் தெரிய நினைத்தே
னுமது திருநாம தேய மென்ன.

வ-ம்— என் நாம தேயம் சுலோசனை உமது நாமதேயமென்ன?

இந்தி—

பாட்டு.

எட்டுத் திக்குள் ளோரிறையை வென்றதா லெனை
இந்திர சித்தனென்பா ரெல்லோரும்
மட்டுக் குழலிநீ யின்னுஞ் சொல்லவேணும்
வாசபாக வாழு மூரின்பேரும்

வ-ம்— என் பேர் இந்திரசித்தன் நீ வாழுவது எந்தஸ்தலம்?

சுலோ—

பாட்டு.

மற்றோ ரிடமில்லை யெந்நாளும் வாசமாய்
வாழ்வது நானிந்த நாக லோகம்
கொற்ற வரே யென்னைக் கேட்டது போலவே
கூறு விர்தாம் வாழ்வ தெந்த லோகம்

வ-ம்— நான் வாழ்வது இந்த நாகலோகந்தான். தாம் வாழ்வது எந்த லோகம்?

இந்தி—

பாட்டு.

வாழு நகரங் கடல்சூ ழிலங்காபு
ரந்தானது மத்ய லோகம்வரை
வீழிபோ லுங்கனி வாய்மேனி யாளே
விரும்பியுன் தந்தையின் பேரை யுரை.

வ-ம்— நான் வசிப்பது மத்தியலோகக் கடல்சூழ் இலங்காபுரி உன் தந்தையின் நாமதேயமென்ன?

சுலோ—

பாட்டு.

ஆதர வாயுல கந்தாங்கு மென்றந்தை
ஆதி சேஷனு மறிந்து கொள்ளும்
ஓதினே னிது போலவிவ் வேளை
யுமது தந்தை நாமதேய மென்ன

வ-ம்— என்பிதா ஆதிசேஷன். உமது பிதாயாவர்?

இந்தி—

பாட்டு.

ஈசன் கயிலையை வேரொடுபெற்றி யெ
டுத்த ராவணேஸ்வ ரனெனன் றந்தை
வாசமலர்க் குழல் மாதேயென் னேடுவா
மாமோக மையல் மீறுதென் சிந்தை

வ-ம்— பரமசிவன் வாழுங் கயிலையங்கிரியை வேரோடு பறித்துப் பந்தாடிய தசகண்ட ராவணேஸ்வரன் என் தந்தை. நான் உன்னைக் கண்டதும் அடங்காத மையல்கொண்டுவிட்டேன். ஆகையால் என்னோடுவா இலங்காபுரம்போய் மதனகிரீடை நடத்திச் சுகிக்கலாம்.

அலோசனை- விருத்தம்.

நீச்சுநிலை தெரியாமல் குளத்தினிலே இறங்கியவர் நேர்மை போலே
பேச்சிருந்த படியிருக்கக் காரியமோர் படியுயர்த்தி ப்பேச லானீர்
ஏச்சுலகோ ரிதுகேட்டால் நிந்திப்பார் பழியுரைப்பாரிகழ்ந்துநிற்பார்
ஆச்சரிய மறிவுடையீர் கூச்சமின்றி நீருரைத்த லழகிதா மே.

வ-ம்— நீரின் ஆழம்பாராமல் குளத்திலே யிறங்கியவன் கதையைப் போல் ஒருவருக்கொருவர் அளவளாவி யுத்தம சம்பாஷணை செய்துகொண்டிருக்கும்போதே தகாதமொழி யுரைக்கலானீர். மற்றரும் இச்செய்தியைக்கேட்டால் உம்மைப் பழிப்பார், நிந்திப்பார், இகழ்வார் சற்றாவது நீர் வெட்கமடையாமல் இப்படிச் சொன்னது மிக்க அழகாகவிருக்கிறது. போம் போம் வேலை மெனக்கிட்ட ஆசாமி.

இந்திரசித்து— விருத்தம்.

ஆச்சரிய மிதிலென்ன ஆடவர்க்குப் பெண்கொள்ள லழகா மென்று
பேச்சறிந்த பெரியோர்கள் எழுதிவைத்த சாஸ்திரங்கள் பிழையாய்ப் போ
வாச்சவுன தழகுகண்டு மங்கையரு மாடவராய் மருவ நீண்ட (மோ
மூச்சுவிடு வார்களென்றல் நான்சகிப்ப தெவ்வாறு முறைசொல்வாயே

வ-ம்— இதிலென்ன ஆச்சரியம்? புருஷர்களுக்குப் பெண்கொள்வது இயற்கையென்று பெரியோர்கள் சாஸ்திரங்கள் எவ்வளவோ எழுதிவைத்திருக்கிறார்கள். நீ அவைகளைப் படிக்கவுமில்லை கேட்கவுமில்லையோ? நீயோ நிரம்பிய அழகுடைய பருவகால மங்கையாக விருக்கிறாய். பெண்களும் உன்னழகைப்பார்த்தால் தாங்கள் ஆடவனாக உருவெடுத்து உன்னைச் சுகிக்க ஆசை கொள்வார்கள் என்றால், என்னால் எப்படிச் சகிக்கமுடியும்? என் பின்பற்றிவா போய்மணஞ்செய்து சுகிப்போம்.

சுலோசனை— பாட்டு.

பரலோகசா-என்ற தியாகராஜர் மெட்டு.

இ-ம்-பூரிகல்யாணி — தா-ம்-ஆதி.

பல்லவி.

இது ஞாயமா என்னோடு வாவென்ப (இது)

அநுபல்லவி.

எதிர்வரு பெண்டு இச்சைமோகங் கொண்டு
மதமோடு பண்டு மாண்டார்கோடி யுண்டு. (இ)

இந்தி— பாட்டு ஷ.

பல்லவி.

மய லாகினேன் மாறுதிந்த மோகம் (ம)

அநுபல்லவி.

துயரோ தீராது சொன்னே னென்றன்மீது
தயவுசெய்வாது தகுமோ தகாது (ம)

சுலோ— சரணம்.

புத்தி மதிகெட்டு போகத்தா சைப்பட்டு
பித்தமு மேலிட்டு பேசுவதை விட்டு
சத்தியத்தைக் கிட்டு தர்மநெறி தொட்டு
சித்தந் தெளிந்திட்டு செல்வீரிந்த மட்டு (இ)

இந்திர— சரணம்.

மாரன்விடு மைந்து வாளியாலே நொந்து
பாரிலுடல் நைந்து பாதியாய் மெலிந்து
தீரமுமி ழந்து செப்பினேன் பணிந்து
கோரியிங்கு வந்து கூறுவாய் மகிழ்ந்து (ம)

சுலோ—

காதல்பெரு மோசம் காணுங்குல நாசம்
பாதகவி லாசம் பற்றுமே யாயாசம்
தீதிதுஆ பாசம் செப்புதலே தோஷம்
ஆதலாற்பிர யாசம் ஆகுமோவென் னேசம் (இ)

இந்திர—

தக்கநீதி சாரம் சாற்றுறு யபாரம்
தக்கபரி காரம் தோற்றுஆர வாரம்
மிக்கஅுவை கோரம் மேவவுப காரம்
தக்கநீயே தாரம் சேரவாவிந் நேரம் (ம)

சுலோ-வ-ம்—நியாயமில்லாத வார்த்தைகளை மேலும் மேலும் ஓதுவது, உமது கௌரவத்திற்குத் தக்கதா?

இந்தி-வ-ம்— பெண்கொள்வது புருஷருக்குத் தக்கதுதானே, மன்மதாவஸ்தை என்றால் பொறுக்கமுடியுதில்லை மணப்பெண்ணாவதற்கு ஏன் தடைசெய்கிறாய்? வாவா போகலாம்.

சுலோசனை— வெண்பா.

ஒட்டாத வாதுமொழி யோதுவது நீதியல்ல
கட்டாயம் விட்டுவிடுங் காதலை — எட்டாத
கொம்புத்தே னுக்காசை கொண்டால் பெறுவதுண்டோ
வெம்புற்று நிற்கும் நிலை.

வ-ம்— முடவன் கொம்புத்தேனுக் காசைப்படுவதுபோல் நீர்என்னை விரும்புவதில் பயனில்லை அப்பாலே போய்விடும்.

இந்திரசித்து— வெண்பா.

விண்ணம் புவிமுழுதும் வென்றுவந்தே னென்னையுன்
கண்ணம்பு வென்றதடி காரிகையே—எண்ணம்
விருதாவாய்ப் போகாமல் வேண்டுகிறே னுன்னை
வருவாயென் னோடுமகிழ் வாய்.

வ-ம்— ஹே! கோகிலவாணி! என் கையிலுள்ள அஸ்திரத்தினாலே திக்குவிஜயஞ்செய்து மூன்று லோகங்களையும் வென்று வந்தேன், நீயோ உனது கண்ணாகிய அஸ்திரத்தால் என்னை வென்று விட்டாய், எப்பொழுது உன்னைத் தரிசித்தேனோ, அப்பொழுதே எனதுயிர் எனவசமில்லை. நீ கைகொடுத்துக் கரையேற்றாவிட்டால், நான் ஆழ்ந்துமடிந்துபோவேன் என்பதற்கு ஆட்சேபனையில்லை. ஆகையால் வீணான எனபாவத்திற்கு ஆளாகாமல் மனமகிழ்வோடு என் பின்னே தொடர்ந்து வருவாயாக.

சுலோ— பாட்டு.

பாலும்க நாகரா – என்ற மெட்டு,
இ-ம்-பியாகு—தா-ம்-ஆதி.
கண்ணி.

எட்டி நடந்திடும் எட்டி நடந்திடும்
என்மீது மோகமே னோ விடும்

நல்லோர்க ளெல்லோரும் கொள்ளாத பொல்லாத
சொல்லோதி மல்லாடி நிற்குதீர் வேண்டாம் (எ)

வ-ம்— நீர் இப்பொழுது வாது செய்து சுகிக்க எண்ணுவது நீதியில்லாக்காரியம், இஷ்டமில்லாத பெண்ணை வற்புறுத்துவது இழிகுல மக்கள் செய்கையன்றி உயர்குலமக்கள் செய்கையாகாது. ஆதலால், என்மீதுகொண்ட விருப்பத்தைவிட்டு விலகிப்போம்.

இந்தி— கலித்துறை.

காட்சிக் கிசைந்த அழகொத் ததுகலி யாண மென்னும்
சூட்சிக் கிசைந்த பிராய மொத்தது சொல்லுதற்கு
மாட்சிக் கிசைந்த குலமேன்மை யொத்தது மாநிலத்தில்
சாட்சிக் கிசைந்த மனமொன்று மாறுதல் தக்கதன்றே.

வ-ம்— அடி அதிரூப குணசுந்தரீ! நம்மிருவருக்கும் அழகும் பருவமும், குலமும், நலமும், காலமும், இடமும், ஒத்திருக்கின்றன மனமொன்று மாறுதல் தக்கவிதமாகாது, ஆதலால் வாது செய்யாமல் என்னேடுவா.

சுலோ— கலித்துறை.

எட்டாது நிற்பதற் கெத்தனை யுத்தி யெடுத்திடினும்
கிட்டாது சற்றுமென் பார்கல விக்கெனைக் கெஞ்சிகலம்
எட்டாது நின்றிங் குரைப்பது பாதக மென்றனசொல்லைத்
தட்டாது நீரகன் றலது மேவபுகழ் தந்திடுமே.

வ-ம்— 'கிட்டாதாயின் வெட்டெனமற' என்ற நீதியை நீர் படிக்கவில்லையோ? எட்டாத பழத்துக்கேன் கொட்டாவி விடுகிறீர்? இனிமேலுந் தகாது வாதுசெய்து நிற்பீரேல் கட்டாயம் அவமானம் அடைய நேரிடும். சொன்னேன்! சொன்னேன்! என்னைப் பிரிந்து மலர்கொய்யப்போன எனது தேகரட்சணைப் பாங்கிகள் வருமுன்னரே நீர் அப்பாலகன்றுபோய் விடும்.

## சுலோசனைக்கும் இந்திரசித்துக்கும் தர்க்கம்.

எங்குபோனலு முன்கூட - என்ற மெட்டு.

இ-ம்-செஞ்சுருட்டி—தா-ம்-ஆதி.

இந்தி— கண்ணி.

ஆசை மிகுந்தது வாடி—மானே
ஆகுமோ இன்னமு மோடி
வாசமிகுந்த மலர்ச்சோலை யிற் கண்டு
மாறுத லில்லாமல் மீறுமோகங் கொண்டு

சுலோ—

மோசம் நினைந்தது தீது—கொண்ட
மோகமுமக்குத் தகாது
நேசஞ் செய்யவெண்ணம் நெஞ்சிலில்லை கொஞ்சம்
நெருங்கி மொழிந்தது பொருந்தாதிது வஞ்சம்

இந்தி—

எட்டி விலகாதே நில்லு—சற்று
இளகாதோ வுன்மனக் கல்லு
திட்டிநீ வைதாலும் செல்லே னொருக்காலும்
தேகமெலிந்தேனுன் மோகப்பெருக்காலும்

சுலோ—

கொட்டிக் கொட்டியளந் தாலும்—குறு
ணிப்பதக்காமோ மென் மேலும்
வெட்டி வார்த்தைபேசி விரும்பி நிற்பதேனோ
வீண்பழிக்காளாகி நாண மிழப்பேனோ (கொ)

வ-ம்— கொட்டியளந்தாலும் குறுணி பதக்காமோ? வெட்டி வார்த்தை யேன் பேசுகிறீர்? என்னை விட்டு விலகி அப்பாலே போய் விடும்.

இந்தி— விருத்தம்.

ஒருவுலகத் திற்கிறையோ னுனது தந்தை மூவுலகுக்
குரிமை பூண்டு
வருமிறையோ னெனதுதந்தை நின்வாசங் கீழ்நகரம்
வனப்பு மிக்க
பெருமைபெறு மென்வாச மேல்நகர மெனைக்கூடில்
பிழை வராது
திருவுருவ முடையாளே யென்பின்னே வருவதற்குத்
திடங்கொள் வாயே.

வ-ம்— பெண்ணே! உன்பிதா இந்த நாகலோகம் ஒன்றுக்கே அதிகாரஸ்தன் என்பிதா சொர்க்க மத்திய பாதலமென்று மூன்றுக்கும் அதிகாரஸ்தன் உங்கள் நகரமோ, கீழ்நிலையிலுள்ளது, எங்கள் நகரமோ அதற்கு மேல் நிலையிலுள்ளது, எவ்வகையாக ஆலோசித்துப் பார்த்தாலும், உனக்கு நான் மேலான தன்மையுடையவனுவேனேயன்றி, ஒருவிதத்திலேனும் குறைந்தவனல்லேன். நானே உனனைக் காதலித்து மணஞ்செய்துகொள்ள

விரும்பினுல் நீ மறுப்பது தகுமா? நீ அறியா இளம்பருவப் பெண். ஆகையால் பின்னுல் அடையக்கூடிய சுகபோக மேன்மையை யுணராமல் வெறுத்துப்பேசுகிருய், இன்னுஞ் சொல்லுகிறேன். நீ என்னை மணஞ்செய்து கொண்டால், சகலவித மேன்மைகளையடைவாய், ஆதலால் கொஞ்சமேனும் அச்சங் கொள்ளாமல் என் பின்பற்றி வருவாயாக.

சுலோ— விருத்தம்.

ஆசைகொண்ட பேர்களுக்கு ரோசமில்லை யென்னுமொழி
யவனி மீது
பேசுகின்ற நிலைமைதன்னை யின்றறிந்தேன் உம்மிடத்தில்
பின்யா தென்றுல்
கூசுகின்ற நிலையன்றி யாசகர்போல் எனை விரும்பல்
குளிக்கச் சேறு
பூசுகின்ற நிலையன்றே உமதுகுல மேன்மை நல்ல
புதுமை யாமே.

வ-ம்— ஆசை கொண்டவருக்கு ரோசமில்லை யென்ற பழமொழியின் உண்மைப்பொருளை, இன்று நான் உம்மிடத்தில் பிரத்தியச்சமாகத் தெரிந்துகொண்டேன. உத்தமகுல பிரபுக்கள் கீழான செய்கையில் ஒரு நாளேனும் தலையிடமாட்டார்கள். நீரோ கேவலம் யாசகனைப்போல் என்னிடங் கெஞ்சிக் காலில் விழுந்து பணியும் நிலைக்கு வந்துவிட்டீர், இதுதானே மேன்மக்கள் செய்கை? குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டவன் கதையை யல்லவா ஒத்திருக்கிறது? போம் போம் நிற்கவேண்டாம்.

## இருவர் தர்க்கம்.

ஆற்றிலிறங்கும் அழகர்வேடிக்கை - என்ற மெட்டு.

இ-ம்-செஞ்சுருட்டி—ஏகதாளம்.

இந்தி— கண்ணிகள்.

மனங்கலங்கிய தனங்கனம்பதனுல் — மதிமாறிச்சஞ்சலம்
வருந்திநின்றிட நெருங்கி வந்ததனுல்
மாதுனை நாடின னினிது வேளையி
லாதலி னுலினி நீதய வேபுரி (ம)

சுலோ—

இனந்தவர்ந்திடில் கனங்குறைந்திடுமே - இடர்மேவித்தம்புகழ்
இழந்துசந்தத மழிந்தொழிந்திடுமே
எனிது பாதக மாகிய தீவினை
யானதனுல் விடும் நாடுத லேனெனை (இன)

இந்தி—

அஞ்சுகரஞ்சித வஞ்சியிளம்பிணையே - சுகமுந்துயர்கொண்டது
அங்கமெலிந்தது நம்பினேனுன் றுணையே
அண்டையில் வந்தூக லிந்தபெருந்துயர்
கண்டது சென்றிட இன்று கலந்தணை (மன).

சுலோ—

நெஞ்சுரமிஞ்சிமொழிந்த விதந்தகுமா — நெறியின்றியணைந்திட
நின்றதுமின்று மிகுந்த நலம்புகுமா
நிந்தை வருஞ்செய லென்று மொழிந்தும்
நெருங்கிய வஞ்சனை கொஞ்சமு நன்றல (இன)

வ-ம்— இதனுலே கெடுதலுண்டாகுமென்று எத்தனையோ நீதிகளை உமக்கெடுத் தெடுத்துச் சொல்லியும், பாவத்தையும், பழியையும், அவமானத்தையும், வருமீனத்தையுங் கவனியாமல் பித்தம் பிடித்தவன் செய்கைபோல், சொன்னதையே மீண்டுமீண்டு சொல்லி வாது செய்து நிற்குறீர். எனது சகிமார்கள் இங்கு வரும் வேளையுஞ் சமீபத்துவிட்டது உமக்கு நேரும் அவமரியாதையை யேனுங் கவனியும்.

இந்தி— வெண்பா.

திட்டமா நீயே திரிலோக ராணியெனப்
பட்டங் கொடுப்பேனப் பாக்கியத்தைக்—கிட்ட வே
பொன்னேடு கூடிப் பொலிவுபெறு மாமணிபோல்
என்னேடு வந்திடுவையே.

வ-ம்— மதியில்லாத மடமைக்குண மாதே! உன்னைத் திரிலோக ராணியாகப் பட்டஞ்சூட்டி வைக்கிறேன என் பின்பற்றிவா.

சுலோ— வெண்பா.

இச்சையுறு பெண்ணொருத்திக் கிவ்வீரப் பட்டத்தை
நச்சுகிலேன் நானதையிந் நாளினிலே—நிச்சயமென்
நேசத்தை நீர்விரும்பி நிற்பதனை விட்டுமது
தேசத்தைச் சேருவதே சீர்.

வ-ம்— எவள் விரும்புகிருளோ அவளுக்கு அந்தப் பட்டத்தை நீர் சூட்டிவையும், எனக்கு வேண்டுவதில்லை. அப்பாலே யகனும.

## இருவருக்குந் தர்க்கப் பாட்டு.

சந்தம்.

தானன தான தன
தானன தான தன
தானன தான தன—தனதான

இந்தி— நானேது காதனமொழி
கேளாத தோ செவியும்
நாடாத தேது மயல் சகியேனே

சுலோ— மானுர்கள் மீதுபய
லானுர நேகருயிர்
வானேற லானகதை தெரியீரோ

இந்தி— தேனுட லானமொழி
மானேச லாபமொடு
சேராயிவ் வேளேயெனே யணைமீதே

ஏனுசை மோகமய
லானீர டாதசெய
லீதாகும் நீர்விலகி விடுவீரே.

வ-ம்— இன்னும் உமக்கு மோகப்பயித்தியம் விட்டு விலகவில்லையோ நான சொல்லுவதை நன்ருகச்செவிகொடுத்துக் கேளும்.

விருத்தம்.

நீச்சர்புரி பாதகங்களைந்திலொன்று காமமென
நிகழ்த்து வார்கள்.
நாச்செருவிக் கொண்டுரைத்தீர் நான்விரும்பி லேணிதனில்
நலனே யில்லை
வாச்ச விது வெளியானல் வன்னிசிறு விஷக்காற்ருல்
வந்தென் தந்தை
மூச்சுவிடி லுமதுடலைத் தீச்சுவிடு மகலுவது
முறைமை யாமே.

வ-ம்— பஞ்சமா பாதகத்தில் காதல் தலைமைபெற்றதென்பதை நீர் தெரிந்துகொள்ளாமல் வாய்க்குவந்தபடியெல்லா● உளறுகிறீர்.

இதில் சற்றேனும் பலனில்லை, எனது பிதாவுக்கு, ஒரு சேதி வெளிப்படுமானால் அவர் ஒரு மூச்சிலுண்டாகும் விஷாக்கினி உமது தேகத்தைப் பஸ்பமாக எரித்துவிடும் ஆகையால் அவ் வித அனர்த்தத்திற்கு நீராளாகாமல், அகன்றுபோவது நல மென இன்னுஞ்சொல்லுகிறேன், பிராணனோடு நீர் வாழுவ தற்கு எண்ணமுண்டானால் இப்பொழுதே இந்த இடத்தை விட்டு நீங்கிப்போய்விடும்.

இந்தி— விருத்தம்.

என்னிலைமை யறியாம லிப்படிநீ பேசுகின்றாய்
எட்டுத் தக்கும்
உன்னியொரு கணைதொடுக்கி லுடைந்தண்ட கோளமுத
லொடுங்குங் கண்டாய்
வன்னியென்ன செய்யும்விஷ வலியென்ன செய்யுமெனை
மாதே நீயோர்
கன்னிசிறு பெண்ணதனால் மொழிகின்றாய் தொடர்ந்துவரக்
கருது வாயே.

வ-ம்— என்னை இத்தன்மையுடைய பராக்கிரம வீரனென்று நீ தெரியவில்லை. நான் எனது வில்லைவளைத்து நாணியைமாட்டிட் டங்காரஞ் செய்து ஒரு கணைதொடுப்பேனானால், அண்ட ரண்ட பகிரண்டமும், நடுநடுங்கி அடுக்கிய கட்டிடம் கலைபட்டுஉதிர்ந்து விழுந்து விடும். உன் பிதாவினது விஷாக்கினி என்னை என்ன செய்யக்கூடும்? இப்பொழுது என்னிஷ்டப்படியே பின்பற்றி வருகிறாயா, அல்லது பலாத்காரஞ்செய்து உன்னைத் தூக்கிக் கொண்டு போகட்டுமா? என்ன சொல்லுகிறாய்?

சுலோ-வ-ம்— உமது பட்டிமிரட்டுக்கு நான் பயப்படுவேனென்று நினையாதீர் அப்பாலே யெட்டிப்போம்.

## இருவருக்குந் தர்க்கப் பாட்டு.

கபரதரபாத் – என்ற மெட்டு.

இ-ம்-இந்துஸ்தான்தோடி—தா-ம்-ஆதி,

இந்தி— பல்லவி.

சித்தமகிழ்வாய் நீ
சேரவருவாய் விரைவாய் (சி)
சேயிழையே யுன்மையலி னுழலும் நோயகல (சி)

சுலோ— பல்லவி.

உத்தம மல்ல நீ
ரோதுவது தீயநெறி (உ)
உற்றபழி யைத்தருவ தற்குரிய கெட்டசெயல் (உ)

இந்தி— அநுபல்லவி.

புத்தமு தத்துமொழி பொருந்திய மானே
பூவையர்பதி சேர்தல் புவிமுறை தானே
இத்தகி யிதுகெட்ட செயலென்ப தேனே
என்னோடுவந் தாலுனக்குண்
டெந்நாளுமின் பஞ்சொனமேனே (சி)

சுலோ— அநுபல்லவி.

உமதெண்ணம் நிறைவேற உரைத்தீரிப் போது
உற்றார்பெற்று ரறிய ஒருசிறு மாது
தமதெண்ணப் படிகண வனைச்சேரற் றீது
சந்த்ரசூர்ய ருள்ளவரை
வந்தநிந்தையும் போகாது (உ)

இந்தி— சரணம்.

தம்பதி யிருவர்கள் தாம்கூடுங் கூட்டம்
தக்கவின்ப மெனுஞ்செந் தமிழ்நூலி னட்டம்
வம்புமற் றரிவைக்கு மணமேபோ ராட்டம்
வந்திடுஞ்சாகும் வரையுந்
தந்திடுந் துன்பந் திண்டாட்டம் (உ)

வ-ம்— பெண்ணே! எட்டுவிதமாக வேதத்தில் சொல்லப்பட்ட மணத்தில் தமிழ்நூல் மெச்சிப்புகழ்ந்தது காந்தருவ வழக்கத்தையே, மற்றும் எழுவகை மணமும் நிரம்பிய அன்பைத்தாரா தன. அவைகளாலே துன்பமே சாரும்வரையில் உண்டென அறிவுடைய முதியோருஞ் சொல்லுவர். நீ அறியாச்சிறுமியாகையால், அன்புக்குரிய காந்தருவ மணத்துக்குத் தக்க தருணம் நேர்ந்திருப்பதைத் தெரியாமல் வெறுத்துத்தள்ளுகிறாய். நீ என்ன சொன்னாலும் நானுன்னைவிட்டுத் தனியாகப் போகப்பட்டவனல்லன். உன் முகக்குறி செய்கையெல்லாம் என்மீதில் காதலைக் கொண்டவள்போலுந் தோற்றுகின்றன. வார்த்தைகள்மாத்திரம் இணங்காத செய்கைப் பொருளைத் தருகின்றன.

அந்த விபரத்தைச் சொன்னால், உனக்குச் சமாதான ஞாயங்களைச்சொல்லி, உனது சந்தேக விபரீத அபிப்பிராயங்களை நீக்கிவைக்கலாமென நினைக்குறேன். நீ யெதற்காகக் காந்தருவ மணத்துக்குடன்பட்டு என்பின்பற்றி வரமாட்டேனென்கிறாய், அதனை முன்பு சொல்லு?

சுலோ— சரணம்.

காவல்தானே பாவையர்க் கழகென வோதி
கடந்துபோகக் கூடாதென் பதேதமிழ் நீதி
மேவிய அதற்குவி ரோதமாஞ் சேதி
விளம்புகின்றீர் நீரேதான்
மதங்கொண்ட சாஸ்திரவாதி (உ)

வ-ம்— 'காவல் தானே பாவையர்க் கழகு' என்னுந் தமிழ்நீதி வாக்கியத்தை மாத்திரம் நீர் படிக்கவில்லையோ? அதன் பொருளுணர்ந்தால் இப்படி எதிர்மொழி பேசவும் துணிவுண்டாகுமா? காவலென்னும்பதம் பெண்களுக்கு ஒருக்காலும் சுதந்தரமில்லையென்பதைச் சந்தேகமறவிளக்கும். அதாவது ஒருபெண் இளம் பிராயத்தில் மாதா பிதா காவலுக்குள்ளும், மணஞ்செய்தபின் பர்த்தாவின் காவலுக்குள்ளும், பதிக்குப்பின் தனது புத்திரர் காவலுக்குள்ளும், புத்திரரில்லாவிடின் சுற்றத்தார் காவலுக்குள்ளும் அமைந்திருக்கவேண்டும் .மேற்சொல்லிய காவலைக் கடந்து ஒருபொழுதும் மீறலாகாது அப்படி மீறினால் கற்புடைய மாது என்று உலகத்தார் கருதுவதற்கு இடமில்லை. பாவமும் பழியுமே தன் தலையில் சூட்டிக்கொண்டு பிறந்த குலத்திற்கும் புகுந்த குலத்திற்கும் அவமானத்தை யுண்டாக்கி வைப்பாள். அழகிலுங் குணத்திலும், பருவத்திலும் உருவத்திலும் நீரெனக்குத் தகுந்த மணவாளனாக நான் கருதினும், மாதா பிதா காவலுக்குரிய இக்காலத்தில் அவர்கள் சம்மதமில்லாமல் நான் எப்படி உம்மோடு வரக்கூடும்? நீரே யிதற்கு மறுமொழி சொல்லும்?

இங்-வ-ம்— இப்படியுள்ள அபிப்பிராயத்தை நீ முன்னமே தெரிவித்திருந்தால் இவ்வளவுகாலதாமதமும்,சிரமமும்ஏற்பட்டிராவே. நல்லது நீ படித்துணர்ந்த தமிழ்நூலின் உண்மைக்கருத்தை

உன்மனங்கொள்ள எடுத்துரைக்கிறேன். அப்புறமேனும் இது வரை சொல்லிவந்த பிடிவாதத்தை விட்டு என்பின் பற்றி வருகிறாயா?

சுலோ-வ-ம்— என்மனம் ஒப்புமாறு நீர்ஞாயம் எடுத்துச்சொன்னால் உமது பின்பற்றிவரத் தடையுமேற்படுமோ? எங்கே தமிழ் நூலின் உண்மைப்பொருளைச் சொல்லுங் கேட்கிறேன்.

இந்தி-வ-ம்— கவனமாகக்கேள்— தமிழ் என்பதற்கு இனிமையென்பது பொருள். இனிமையென்பது என்ன? இன்பம். அது அன்புகாரணமாக மனத்தின்கண் நிகழ்வது, இந்த அன்பே தமிழ்வடிவமென்பது மிக்கநுட்பமாக ஆராய்ந்து பார்ப்போருக்குத் தென்படக்கூடிய ஆழமான அருத்தம் பொருந்தியது. அதனை உனக்கு முன்பு எளிதாக விளக்கிக் காட்டுகிறேன். தமிழ் என்னும் பாஷை முதலில் அகரத்தையும் இறுதி னகரத்தையுமுடையது. இவ்விரண்டு அட்சரமுங்கூடி அன்-என்னும் பகுதியாக நின்றுபகர உகரமாகிய-பு-என்னும் பண்பு விகுதியை ஏற்று அன்பு என்பதான சொல்லாக முடிந்தது. ஆகவே தமிழென்பதற்கு நேரான பொருள் இன்பத்தையுண்டாக்கும் அன்பென்று சொல்லப்படும். இன்பத்தைச் சிற்றின்பம் பேரின்பமென்று சொல்வதுபோல அன்பையும் சிற்றன்பு பேரன்பு என்று இருவகையாகப் பிரிக்கலாம். சிற்றன்பு தொடர்புடையார்மாட்டுச் செல்வது. பேரன்பு சகல ஜீவப் பிராணிகளிடத்தும் செல்வது. ஆகையால், பேரன்பை அருளென்று சொல்லுவார்கள். சிறிதாக இருப்பதே பெரிதாக வளருவது உலகானுபவம். ஆனதினாலே சிற்றின்பமே முதிர்ந்தவிடத்துப் பேரின்பமாக மாற்றப்படும். இதற்குத்தான் தமிழ்வேத நூலுடையவர் அருளென்னும், அன்பின்குழவி என்றார். இதனால் அன்பு தாய் என்றும், அருள் பிள்ளை என்றும், விளங்கலாயின. தாயில்லாது பிள்ளையில்லாத வாறுபோல சிற்றின்பில்லாது பேரன்பாகிய அருள் இல்லவேயில்லை. சிற்றன்பு, லௌகிக மார்க்கம், பேரன்பு வைதீகமார்க்கம், லௌகிகமார்க்கம் இல்லறம், வைதீக மார்க்கம்துறவறம், இல்லறம் நாட்டுக்குரியது, துறவறம் காட்டுக்குரியது. வடமொழியார் அறத்தை பிரமச்சரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சன்யாசமென நான்காகப்பிரித்தார்கள்.

தமிழ் மொழியார் இரண்டாக அடக்கினூர்கள் எனினும் இருவருக்கும் கருத்தொன்றே அதில் வித்தியாசமில்லை. பிரமச்சரியம் என்பது - இளம்பிராயத்திலே ஆசிரியனிடம் வித்வ பாராங்கதனாகி ஒழுக்கமுறைகளைக் கற்றுநடப்பது. கிரகஸ்தமென்பது- இல்வாழ்க்கைக்குத் துணையாகிய நன்மனைவியைக்கூடிவாழ்வது; இவ்விரண்டும் நாட்டிலிருந்து செய்யப்பட்ட அறம். வானப்பிரஸ்தமென்பது-மனைவியோடேனும், தனியாகவேனும் விரதானுஷ்டான தவயோக தியான தவங்களைச்செய்வது. சன்யாசமென்பது - வேண்டுதல் வேண்டாமை நிலைகொண்டு திரிந்து ஞானசமாதி யடைவது. இவ்விரண்டும் காட்டிலிருந்து செய்யப்பட்ட அறம். இவ்வகை அறத்தை நான்காகவகுக்கப்பட்டாலும்

குறள்.

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவருக்கும்
நல்லாற்றி னின்ற துணை.

என்பதால் கிரகஸ்தனே மற்ற மூவகை அறஞ்செய்வாருக்கும் உதவி செய்பவனாக இருப்பதால் அவனே மற்ற மூவருக்கும் சிறந்தவனாக மதிக்கப்படுகிறான். மேற்சொல்லிய சிற்றன்பில்லாதவன் கிரகஸ்தனாயினும் மற்ற மூவருக்கும் உதவி செய்யமாட்டான். ஆகையாலந்த அன்பைத் தான் அடைந்து நாளாரம்பத்தில் விருத்தி செய்துகொள்ளுவதற்கேனும் அவசியம் ஒரு நற்குண மங்கையைத் தேடி மணமுடித்துக் கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் அந்த அன்பு தொடர்புடையார்களிடத்துச் செல்லுவதற்கு நல்ல மார்க்கமேற்படும். அதனை முன்பு விஸ்தரிக்கிறேன். மிக்க கவனமாகச் செவிகொடுத்துக் கேட்பாயாக. மனைவியைக் கொண்ட ஒருவன் அவள் சுகத்தைத் தனது சுகதுக்கமாக இயல்பிலே கொள்ளுகிறான். காரணம் தனக்குவேண்டிய சவுகரியங்கள் குறைபடாதிருப்பதற்கு அவள் சவுக்கியமாகவிருக்கவேண்டுவ தவசியமன்றோ? அவள் நோய் முதலான வருத்தமடையும் பட்சத்தில் உண்டியுபசரித்தலுக்கும் தனக்குதவாதநிலை ஏற்படுவதனால் முதலில் அவள் வருத்தத்தை நிவிர்த்திபண்ண வழிதேடுவான். பின் அவளுக்கு அவ்விதமான பிணிவருவதற் கியலாதவாறு, நெருப்பாறு, மயிர்ப்பாலம்போல் அவள் தேகத்தைப் போஷித்துக்கொண்டு வருவான். அதுதான் அன்பிற்கு முளையாகும். அப்பால் அவன் மனைவி தனது

தாய்தந்தையர், அண்ணன், தம்பி, சகோதரிமார்கள் துயரத்துக்கு வருந்துவாள். அது கண்ட கணவன் தனது மனைவி வருந்துவதற்கு மூலகாரண முடையவரை யறிந்து அவர்கள் பிணிக்கும் அவிழ்தங்களைத்தேடி நிவிர்த்திப்பான். இல்லையேல் மனைவி துயரம்நீங்காதன்றோ? மனைவி துயரம்நீங்காதவளானால் தனக்கு எப்படிச் சுகங்கிடைக்கும்? இவ்வகையில் அன்புதழைக்கும் அப்பால் மனைவியின் மாதா பிதாக்களுக்குச் சுற்றமானவர்க்குப் பிணியடைந்தவர்கள் பிணியடைந்தால் அவ்விஷயத்துக்கு. அவர்கள் வருந்த அவ்வகையைக்கண்டு தாய்தந்தையர் வருத்தத்திற்குத் தன் மனைவி வருந்த. மனைவி வருத்தத்திற்கு மூலம். அவளின் தாய்தந்தையரின் சுற்றத்தார் எனத்தெரிந்து, அவருக்குண்டாகிய பிணி நிவிர்த்திக்கும் அவிழ்தந்தேடுவது புருஷனுடைய கடமையாகிவிடும். இப்படி நாளுக்குநாள் சிற்றன்பு விருத்தியையடையும் அப்பால் இயல்பிலேயே அன்புமுதிர்ந்து பழக்க வழக்கத்தினால் தனது தொடர்பு இல்லாவிடத்தும், சகல பிராணியிடத்தும் இரக்கமுண்டாகும். அதுவே பேரன்பாகிய அருளாம். 'அருளில்லார்க் கவ்வுலகமில்லை பொருளில்லார்க் கிவ்வுலகமில்லா கியாங்கு' என்பதால் இந்த அருளையடையாதாருக்கு மறுமைப்பயன் அணுவேனுங் கிடையாது.

குறள்.

பெற்றாற்பே றிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்
புத்தேளிர் வாழு முலகு

அதாவது— நற்குண நற்செய்கையுடைய மனைவியை யடைந்தவரே சுவர்க்கலோக வாசியரால் உபசரிக்கப்படும் பெரிய சிறப்பை யடைவார். அவ்வித யோக்கியதையுள்ள மனைவியை யடைவதற்குப் பிரமம், பிராஜாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம், எனனும் எட்டுவிதமான மார்க்கங்கள் வேதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் கொடுப்பார், அடுப்பாரில்லாமல் ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டுக்கூடும் காந்தர்வ மணம், களவுமார்க்கமாயினும், களவின்வழி வந்த கற்பே சிறப்புடையதென்று பெண்களுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. இது தமிழ் நூலின் உண்மைக்கருத்து ஆகையினாலே,

## இருவருக்குந் தர்க்கம்.

பாட்டு.

சாமியுரைப்படி - என்ற மெட்டு.

இ-ம்-பியாகு - தா-ம்-ஆதி.

இந்தி— துக்டா.

அன்புக் கொன்றுப டுங்கற்பின் பொரு
ளன்றிப்பின் பிலேவா

சுலோ— ஆனால் நாயகனீர் நான்நாயகி
போவோம் மீறுதவா

இந்தி— இன்பப்பண்பு நலம் பெற்றிங்கித
மிங்குற் றண்டினனே

சுலோ— ஏனினி மேலொரு தாமதம்நீர் செய்வ
தேகவு நாடினனே

இந்தி— இல்லை தடையில்லை

சுலோ— இல்லையொன் றுந் தாமதித்தால் தொல்லை

இந்தி— ஏகுவோமே இனிநாமே
இச்சை விளக்க மலர்க்கணை விட்டவ
னைத்துதி பாடிடுவோம்
ஏகியிவ் வேளையி லேயணை மீதினி
லேறியு லாவிடுவோம்

இருவரும் கைகோர்த்துப் போகிறார்கள்.
சேடிகள் வருகிறார்கள்.

ம-லி— அடி சிங்காரம்! நமது எஜமானியை யெங்கேயடி காணோம்?

சி-ம்— எங்கே போவாள் இந்தப் பக்கத்திற்றான், ஏதாவது விநோ தங்களைப் பார்த்துக்கொண்டு நிற்பாள்

ம-லி— என்னடி! சூரியன் அஸ்தமிக்கும் வேளை சமீபத்துவிட்டது இன்னுமென்ன விநோதம்? நாம் அரண்மனைக்குப் போகவேண் டாமா? நானிந்தப் பக்கமாய்ப் பார்த்து வருகிறேன், நீ அந்தப் பக்கமாய்ப் போய்ப்பார்த்து, நின்றால் அழைத்துவா.

சி-ம்— அப்படியே (இருவரும் போய்த்தேடிப்பாாத்துச் சந்திக்கிறார் கள்)

ம-வி— என்னடியம்மா! அவளை யெங்கே?

சி-ம்— நான் காணவில்லையே,

ம-வி— நானுமிந்தப், பக்கமெல்லாம் சுற்றிப்பார்த்ததுமல்லாமல் உரங்கொண்ட வண்ணம் அவள் பேரைச்சொல்லிச் சத்தமிட்டுக் கூப்பிட்டுப் பார்த்தேன் இனியென்னசெய்யலாம்? ஐயோ! அரசன் அரசிகேட்டால் நமக்குத் தண்டனை கிடைக்குமே.

சி-ம்— தண்டனைவந்தால் அனுபவிக்க வேண்டியதுதான். இனித் தாமதிக்கவேணடாம் அரசரிடம் போய்ச்சொல்லுவோம்.

(போகிறார்கள்.)

ஸீன்முடிவு.

---

## ஸீன்—2:

காலம் — முற்பகல்.
இடம் — அரண்மனை.
பா-கள்— ஆதிசேடன், சேடிகள், சாரணர்.

### ஆதிசேடனுக்கும் சகிகளுக்கும் தர்க்கம்.

பாட்டு.

பாதமலரிணைப் பணிந்தேனுன் - என்ற மெட்டு.

இ-ம்-காபி-தா-ம்-ஆதி

சகிகள்— துக்டா.

நாங்களென்ன செய்வோம் நடுங்குதே நெஞ்சம்

ஆதி— எங்குதே யென்மனம் இயம்புவீர் சேதி

சகி — மாங்குயில் மொழியாள் சுலோசனை மாது
மலர்கொய்ய நந்தவன மருவிய தீது

ஆதி— நீங்குநேர்ந்த தென்ன திருமகளுக்கு
தெரிவிப்பீர் விபரமாய்த் தெரிந்துகொள்வதற்கு

வ-ம்— எனது கண்மணி சுலோசனவுக்கு நேர்ந்த விபத்தென்ன? பயப்படாமல் நீங்கள் சொல்லுங்கள்?

சகி — பாட்டு.

பொருந்திய வழக்கம்போல் பூங்காவில் சென்றோம்
புனலாடிப் பந்தடித்து விளையாடி நின்றோம்

வ-ம்— ஐயா! நாங்கள் வழக்கம்போல் எங்கள் எஜமானி சுலோசனையம்மாளோடு நந்தவனம்போய் மலர் கொய்தும், செண்டு கட்டியும், புனலாடியும், பந்தடித்தும் விளையாடிக்கொண்டிருந்தோம். எங்கள்பேரில் யாதொரு குற்றமுமில்லை. எஜமானிக்கு நேர்ந்த விபத்தைச்சொல்ல எங்களுக்கு அச்சமுண்டாகிறது. நாங்களென்ன செய்வோம்.

ஆதி— பாட்டு.

நின்றதி லேதுபிழை நேர்ந்த தவளுக்கு
நீங்கள்பயங் கொள்ளாமல் நிகழ்த்துவீ ரெனக்கு

வ-ம்— எனது கண்மணி சுலோசனைக்கு நேர்ந்த விபத்தென்ன? நீங்கள் பயப்படாமல் சொல்லுங்கள்.

சகி — பாட்டு.

எங்களைமலர் கொய்ய ஏவினாள் நீங்கி
ஏகிவந்து காணும விடருற்றோ மேங்கி (நா)

வ-ம்— நாங்களெல்லோரும் ஒருங்குகூடி விளையாடிக்கொண்டு நிற்கும்போது எங்களெஜமானி யாவரையும் நாலா பக்கங்களிலேயும் போய் மலர்கொய்து வரும்படிக் கட்டளையிட்டு அவர்கள் ஒரு தேமாமரப் படர்கொடி விநோதம் பார்த்துக்கொண்டு நின்றார்கள். நாங்கள் மலர்கொய்து திரும்பிவந்து பார்த்தோம். எஜமானியைக் காணோம். அதனாலே புலம்பி வரலானோம்.

ஆதி— பாட்டு.

அங்குள்ளா ளெங்கேபோவா ளடுத்த தோர்பக்கம்
அகன்றுநிற்பாள் போய்த்தேடு மையையோ துக்கம் (ஏ)

வ-ம்— அங்கு நின்றவளெங்கு போவாள்? நந்தவனத்துக்குள் தான் ஒருபக்கம் நின்றுகொண்டிருப்பாள் சீக்கிரம் ஓடிப்போய்த் தேடிப் பார்த்து வாருங்கள்.

சகிகள் — பாட்டு.

எங்களாலான வரை எங்கெங்குந் தேடி
இளைத்துக் காணாமலே வந்தியம்பினோம் வாடி

வ-ம்— ஐயா! நாங்கள் நந்தவனத்துள்ளும் புறம்பும், திக்கு திசை மூலைகளெல்லாம் ஓடி நுழைந்து பார்த்துவிட்டோம் எங்கும் காணுததாலே தான் மதிமயங்கி வாடி இங்கு வரலானோம்.

(ஆதிசேஷன் மூர்ச்சையாகித் தெளிந்தெழுந்து)

ஆ! கண்மணி!

பாட்டு.

ஆயே நாதா பீரஸ்காங்தே - என்ற மெட்டு.

இ-ம்-பியாகு—அட தாளம்.

கண்ணி.

என்னருமைக் கண்மணியே எங்கு சென்றுய் நீயம்மா
இந்தவேளை வந்துசேராத தேனோ நிற்குறுயம்மா
உன்னையன்றி என்னுயிரெந் நாளும் வாழலாகுமா
ஓடிவந்து சேராயாயான் உற்ற துன்பம்போகுமா

கான ரசத் தேனேயெந்தன் கண்மணியே வந்திடாய்
சாண விங்கு நீதனித்த காரண மொழிந்திடாய்
துஷ்ட மிருகங்களாலே தொந்தரவு நேர்ந்ததோ
தோகையர்களுக்கிந்நாளில் துன்பமென்ன சேர்ந்ததோ

வ-ம்— ஆ! என்னருமைப் புதல்வியாகிய சுலோசனு! நீ எங்கு போனுய்? துஷ்ட மிருகங்களினுலே உனக்கு அபாயம் நேர்ந்ததோ அல்லது அன்னிய ராட்சசர் முதலான துஷ்டர்களினுலே இடையூறு நேர்ந்ததோ? நானென்ன செய்வேன்? உன்னைக் காணுமல் உயிர்வாழுவதெப்படி அப்பா அப்பா என்று அனுதினமும் நீ அழைக்கும் உனது அருமை மொழியை யினியென்று கேட்பேன்.

பாட்டு.

பல்லவி.

இனி நான் காண்பேனே
எனது வாழ்வினி லுரியமாநிதி எனவுமேவு குமரியை (இ)

அநுபல்லவி.

மனிதர்செய்த வுபாயமோ வலியராட்சசர் மாயமோ
தனிமையாயவ ளகலவேவினை தழுவலான அபாயமோ (இ)

சரணம்.

கள்ளங் கபடுகள் பகுத்தெண்ணாள் கன்னிசிறுவய திளம் பெண்ணாள்
களித்தபாதகர் சிறைக்குளேயகப் படுத்திலோதுயர் சகிக்கொண்ணாள்

கூட்டில் காக்கையன்பாலுமே குயிலைவளர்க்க மென்மேலுமே—அது
குணமடைந்தது மகளகன்றனள் குயில்பறந்ததுபோலுமே
(இனி)

வ-ம்— தெய்வமே! குயில் காக்கைக் கூட்டில் வளர்ந்து மீளுவது போலே, சிவ அம்ஸமாக உற்பவித்த சுலோசனை யென்னாலே வளர்க்கப்பட்டு மீண்டனளே, காக்கை, குயில்பார்ப்பை வளர்ப்பதுபோலல்லவோ, சிவ அம்ஸ சுலோசனையை நான் வளர்த்தவனாகினேன். இனியென்னால் செய்யத்தகுவது யாதோ? ஒன்றும் அறிகிலேனே? ஆரடா! சாரணர்கள் அருகில் வாருங்கள்.

சாரணர்— மகராஜ் கட்டளையாதோ?

ஆதி— பாட்டு.

பாங்கிக் கலாவதி கேளடி – என்ற மெட்டு.

இ-ம்-காபி—ஏகதாளம்,

பல்லவி.

சாரணரே யோடிப் பார்த்திடும்
தையலை யென்னிடஞ் சேர்த்திடும் (சா)

அநுபல்லவி.

பாரினி லீதவமானமே பார்த்தவர் நிந்திப்ப ரீனமே
பக்கங்களெங்கும் நிதானமாய் (சா)

சரணம்.

போக்கிரி எந்தப்பயலோ நேரில் கண்டு
பூவையினை பொருந்தி மோகங்கொண்டு
தூக்கிச்சிறை செய்தா னென்றும் பயமுண்டு
சுருக்கினிலே சென்று தேடும்சொன்னேன்விண்டு (சா)

வேற்றிடந் தன்னிலே அண்டிச்சிறு மாது
வேதனை கொண்டாளோ யாதுந் தெரியாது
மாற்றுருக்கொண்டு மறைந்துநீ ரிப்போது
வான்புவி லோர்கங்க ளோரிடந் தப்பாது (சா)

வ-ம்— சாரணர்களே! எனது செல்வக்குமரி சுலோசனையை எந் தத்துராத்மாவோ சிறையெடுத்துப் போயிருக்கிறுனென நினைக்கிறேன் ஆகையால், நீங்கள் சுவர்க்க மத்திய பாதலமென்னுந் திரிலோகங்களில், புகை நுழையாத இடங்களிலெல்லாம், நுழைந்து தேடிப் பார்த்துக் கண்டுபிடித்து வாருங்கள், தாமதிக்கவேண்டாம் இதே நிமிஷம் புறப்பட்டுப்போருங்கள்.

சார-வ-ம்— பிரபு! தங்கள் கட்டளையின் பிரகாரம், நாங்கள் திரிலோகங்களிலும் சென்று, எப்படியேனுங் கண்டுபிடித்துச்சிறை செய்து போன துராத்மாவினது தேகத்தைக் கண்டங் கண்டமாகத் துண்டித்து, மிருக பட்சிகளுக் கிரையாக்கிக் குழந்தை ராணியம்மாளைத் தங்களிடம் கொண்டுவந்து சேர்ப்பிக்கிறோம்.

ஆதி— அப்படியே சடுதிபோய் வாருங்கள் (போகிறார்கள்.)

ஸீன் முடிவு.

## ஸீன்-3.

காலம் — காலை

இடம் — இலங்கை அந்தப்புரம்.

பா-கள் — சுலோசனு, பார்வதி.

தேவியினது சிலையை அலங்கரித்துத் தியான நிஷ்டை செய்திருக்கும் சுலோசனை முன் அம்பிகை பிரத்தியச்சமாகிறுள்.

அம்பி— பரமபக்த வனிதாசிரோமணியாகிய சுலோசனு! உனது உருக்கமான பிரார்த்தனையை மெச்சி, நீயாரைக்குறித்துத் தியானித்தாயோ அந்த உமாதேவி வந்திருக்கிறேன் வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்.

சுலோ— தேவி நமஸ்கரிக்கிறேன்.

அம்பி— மங்களமுண்டாகுக உன் விருப்பத்தை வெளியிடுவாய் அவ்வண்ணம் அநுக்கிரகம் புரிவோம்.

சுலோசனை— விருத்தம்.

அன்பதி னுருவமான அம்பிகை யுமையேகோணம்
ஒனபதில் வளாநின்ற உமாமகேஸ் வரியேதாயே
பொன்பதி கவினுந்தாலி பொருந்திநான் வாழும் வண்ணம்
என்பதி மரணமில்லா திருக்கநீ வாமீவாயே.

வ-ம்— தாயே! நான் நித்திய சுமங்கலியாக உலகத்தில் வாழும் பொருட்டாக, எனது நாயகர் சாகாதிருக்கும்படி வரங் கொடுக்கப் பிரார்த்திக்கிறேன்.

அம்பி— பாட்டு.

அடைக்கலமே — என்ற மெட்டு.

இ-ம்-ஆரபி — தா-ம்-ஆதி.

பல்லவி.

இது தருமா இது தருமா
இறப்பை நீக்கியெவர்கள் இருக்கிறார் புவிதனில் (இ)

அநுபல்லவி.

விது வதனமுடைய மெல்லிய லாளே
வேறு வரந்தருவேன் விரும்பிநீ கேளே (இ)

சரணம்.

வினைப்போகமே யொரு தேகமா மென்றும்
மேவியனுபவிக்க வேணும தென்றும்
தினைப்போதும் வினைநீங்கில் சிறிது நில்லாதென்றும்
செப்புவார் வேதமுறை தெரிந்தவரே யென்றும் (இ)

ஒருவர்க்கு மற்றொருவ ருதவியே யில்லை
உற்றவர் மற்றவரென் பதுபாசத் தொல்லை
வருபவர்க் கிலக்காகு மாநிலத் தெல்லை
மனமகிழ்ந்து நீ கேட்பாய் வழங்குமென் சொல்லை (இ)

வ-ம்— பக்தியில் மிகுந்த பாவையே! 'வினைப்போகமேயொரு தேகங் கண்டாய் வினைதானொழிந்தால், தினைப்போதளவு நில்லாது கண்டாய்' என்ற நீதியை நீ படிக்கவில்லையா? பிறந்தவர் எல்லோரும் இறப்பார்கள், சாகாமல் சாசுவதமாக எவரும் உலகிலிருக்கமாட்டார்கள். அமரத்வவரம் பெற்றாலும் அது கால அளவுக்குட்பட்டதே. அண்ணன் தம்பி மாமன், மைத்துனன், கணவன், தாய்தந்தை, மனைவி என்னு முறையுடைய பந்துநேச சுற்ற வர்க்கத்தினர் யாவரும் சந்தைக் கூட்டம்போல வந்து கூடிப் பிரிந்துபோகும் நிலைமை யுடையவரேயன்றி, ஒருவருக்கும் அணுத்துணை உதவிகிடையாது. ஆகையால் நீ மிதமிஞ்சிய ஆசைகொள்ளாமல் வேறுவரங்கேள் தடை செய்யாமல் தருகிறேன்.

சுலோ—

பாட்டு.

சிவனுமைசுத விநாயகா — என்ற மெட்டு.

இ-ம்-பியாகடை-தா-ம்-சாப்பு.

பல்லவி.

சத்திதிரிபுர விமலி கௌமாரி மேனை குமாரி
தவமுதல்வி தருமாயை ஹௌதாரி மகிஷாசுராரி (ச)

அநுபல்லவி.

நத்தியுனதிரு கமல பாதம்
நாளுந்துதி செய்யும் நான்குவேதம்
இத்ததியி லடைந்தேனே பேதம்
எனக்குநீயருள் வாய்ப்பிர சாதம் (ச)

சரணம்.

எனதுபதியுயி ரகலுமதுபோது புவியின்மீது
எதிரியவரின் வலியில்மடியாது சொல்லுவேனது
சினமுடனெனது தந்தை நேராய்ச்
சென்றிருவருக்கும் விளையும்போரால்
மூனையுவேளையிலெம் பதி சாவாராய்
முடியமகிழொடு வாமுந் தாராய் (ச)

வ-ம்— கருணாகரி! எனது நாயகர் சுத்தவீர ஜெயவிஜயராகி யாவரையும் வென்று, முடிவில் எனது பிதா வோடு போர் புரிவாராகில் அவர் கையினாலே மாத்திரம் இறக்கும்படியான ஒரு வரத்தை மாத்திரம் எனக்கு அநுக்கிரகிக்கவேண்டும்.

அம்பிகை—

பாட்டு.

கல்யாணம் செய்துவையுமே - என்ற மெட்டு.

இ-ம்-பியாக்கு-தா-ம்-ஆதி.

பல்லவி.

தந்தேன் தந்தே னந்தவரம் உன்
விரும்பம் போல் (த)

அநுபல்லவி.

தையலேயிவ் வையகமேல்
ஐயமிலை மெய்யாகவே (த)

சரணம்.

சண்டையிட்டுப் பகைவர் தம்மேலும் பொடிய
சந்துசந்தாக விழத் தாக்கியுங் கொடிய
அண்டையில்வந்துநின்று ரவரோடி யொழிய
அவனே ஜெயசாலியா மென மற்றோர் மொழிய (தந்)

அன்னியர்சேனைகணக் கடங்கா வநேக
ஆயுதபாணிய ரரண்டோடிப் போக
உன்னொரு கணவனுக் கேஜெய மாக
உரியமாமனுலவன் ஒழிந்துயிர் சாக (தந்)

ஆனாலுமின்னொன்றுகே ளருமையாயுனக்கு
அவனுயிர் பிரிந்தாலும் நீயுணர்வதற்கு
தானுயுடலுறுப்புப் பதிலுரைப் பதற்கு
தருந்தவரமதுதந் தேன் மகிழ் வதற்கு (தந்)

வ-ம்— சுலோசனா! நீ கவலைப்படாதே: உனதிஷ்டகாமியப்படி உன் கணவன் போர்க்களத்தில் யாவரையும் வென்று ஜெயசீலனாகி முடிவி லுனதுபிதாவின் கையாலே மடியும்படியாகக் கடவன். மேலுமுனக்கு இன்னுமொரு வரந்தருகிறேன் அது என்னவெனில்:— உனது கணவன் உடலுறுப்புக்கள் துண்டு துண்டாக வெட்டுண்டு சின்னா பின்னமாகி உயிர் நீங்கி யுத்தகளத்தில் சிதறுண்டுபோனாலும் நீ கேட்குங் கேள்விகளுக்கு உடலை நீங்கிய அவன்தலையானது தகுந்த பிரதியுத்தர விடையளித்துப் பேசும்படியான ஒரு திவ்ய மகத்துவ வரத்தையும் நானிவ்வேளையில் அனுக்கிரகித்திருக்கிறேன். இதோ எனது பூரண ஆசீர்வாதம் அந்தர்த்தானமாகிறேன். (மறைகிறாள்)

## இந்திரசித்து வருகிறான்.

சுலோ— பிராணேசா! நான் கௌரி விரதம் சம்பூர்த்தி செய்யும் நாளிதுவாகலால், தாமின்றுமுதல் ஒன்பது நாள்வரையும் தம்மை நாடிவரும் யாசகர்களுக்கு இச்சாதானம் வழங்கவேண்டும் அதாவது யார் யார் எந்தெந்த வஸ்துவை விரும்புகிறார்களோ அந்தந்த வஸ்துவை அவரவர்களுக்கு நாஸ்தி யென்று மொழியாமல் மனப்பூர்த்தியோடு தானங்கொடுக்க வேண்டுமென்று அடியாள் விரும்புகிறேன்.

இந்தி— சகி! சுலோசனு! உனது அபிப்பிராயப்படியே வழங்குகிறேன். யாரடா கஞ்சுகன்?

சேவ— பிரபூ! கட்டளையாது?

இந்தி— அடே யின்றுமுதல் ஒன்பது நாள்வரை யார் யார் எப்பொருளை விரும்பிக் கேட்கிறார்களோ, அப்பொருளை அவரவர்களுக்குக் கொடுக்கும் இச்சாதானப் பிரவர்த்தகனுக இருக்கிறேனென்று திரிலோகங்களுக்கும் பிரசுரப்படுத்திவைப்பாயாக.

சேவ— பிரபூ! அப்படியே.

இந்தி— சுலோசனு! ஒரு முக்கிய சமாசாரம். மிகு கவனமாகக்கேள் அதாவது எனக்கு மாற்றாரோடு பிரமாதமான யுத்தம் நேருநாளில் நான் யுத்த கவசம் பூண்டு போருக்குப் புறப்படுவேனையில் நீ என்னிடம் ஒரு ஞாபகப்படுத்தவேண்டும். அது இன்னதென்று உனக்குத் தெரியவேண்டிய அவசியமில்லை. நீ நாதா! யுததம் நேருநாளையில் ஏதோ என்னை ஞாபகப்படுத்தென்றீரே அதனை யோசித்துக் கொள்ளுங்கள் என்றால் போதுமானது கவனந்தானே.

சுலோ— கவனந்தான் பிராண நேசா! அது இன்னவிதம் என்பதை நான் அறியக்கூடாதா?

இந்தி— அறியக்கூடாது என்பதில்லை. அதனாலே உனக்கொரு லாபமில்லையே, விருதாவாக கண்டசிரமம் ஏதுக்கென்றுதான், ஞாபகப்படுத்தினால் போதுமென்றேன்.

சுலோ— அப்படியில்லை பிராணநாதா! எனக்கந்த விபரத்தைச்சொல்லத்தான் வேண்டும்? சற்றுநேர சம்பாஷணையில் தொண்டை வறண்டுபோகுமாக்கும், அப்படித் தொண்டை வறண்டாலும் எவ்வளவோ பரிகாரங்களிருக்கின்றன. நிவிர்த்தித்துக் கொள்ளலாம். சும்மா சொல்லுங்கள்.

இந்திர— சகி! நிகும்பலையென்னும் ஓர் யாகமுண்டு, அதனை யார் பூர்த்திசெய்து நிறைவேற்றுகிறார்களோ அவர்கள் ஒருக்காலும் போரில் அபஜெயமடையமாட்டார்கள். தண்டமேந்திய பிரமா, சக்கரமேந்திய விஷ்ணு, சூலமேந்திய சிவன் வந்துபோர் தொடுத்தாலும், நிகும்பலையாக முடிவுகண்டவனே ஜெயமடை

வான். அப்படிப்பட்ட இஷ்டகாமியார்த்த யாகத்தை முன்னொரு நாளில் அதாவது என்பிதா திக்குவிஜயத்திற்குப் போயிருந்தபோது நான் ஆரம்பஞ்செய்து நடத்துவித்துக் கொண்டிருந்தேன். அதற்குள் எனது பிதா மீண்டு என்சேதியுணர்ந்து என்னிடம்வந்து நமக்கெதிரி ஒருவருமிலர் நீ யிந்தக் கடின யாகத்தை இயற்றி என் சிரமத்தை யடைகிறாய்? போதும் போதும் நிறுத்தென்றுசொல்லி யழைத்தேகினர். அந்தயாகம் நிறைவேறினால் இறந்த நமது துணைப்படைகளையும் உயிர்பெற்றெழச் செய்யலாம். அக்காலம் நாலில் மூன்றுபங்கு யாகச் சடங்குகள் முடிந்தன. அதாவது- முக்கால்பாகம் நிறைவேறின. இன்னும் ஒருபங்காகிய கால்பாகந்தானிருக்கின்றன. அது நிறைவேறினால், அப்புறம் கவலையென்பது ஓர்காலும் போர்விஷயத்தில் எனக்குண்டாகாது. ஆகையால், அற்பமான போர் நடக்கும்போது இதனை நீ எனக்கு ஞாபகப்படுத்தத் தேவையில்லை. பிரமாதமான யுத்தம் நேர்ந்தபோது, அதாவது இது அசாத்தியமான காரியமென்று நீ நினைக்க நேரும்போது, எனக்கு ஞாபகப்படுத்தவேண்டுமென மறுமுறையும் உன்னை எச்சரிக்கிறேன்.

சுலோ— பிராணேசா! தங்கள் சித்தம் என்பாக்கியம்.

இந்திர— காந்தாமணி! யாசகர்வந்து கூடியிருப்பார்கள், நான்போய் அவர்களுக்கு வேண்டுவன தானஞ்செய்து ஒன்பது தினங் கழித்து வருகிறேன்.

சுலோ— நாதா! நமஸ்கரிக்கின்றேன் போய்வாருங்கள்.

இந்திர— கல்யாண்! காதலி! (போகிறான்)

ஸீன் முடிவு.

---

## ஸீன்—4.

காலம் — முற்பகல்
இடம் — நாகலோக அரண்மனை.
பா-கள் — ஆதிசேடன், நாரதர்.

நாரதர் வருகை

பாட்டு.

சாகிச்சித்ரா - என்ற இந்துஸ்தான்மெட்டு.

இ-ம்-பியாகு—தா-ட-ஆதி.

பல்லவி.

சரிகம பதனிசா எழுசுர நிலலய
சங்கீத சுகமே பெரிய சுகம் (ச)

அநுபல்லவி.

கரியுரி யுடையவன் அடிதொழு தனுதினம்
கதிபெறும் வகையது கருது வதுவேமனம்
சுரிகுழல் நெடுமவிழி மடவரி வையரினம்
தோய்மன மடையுமோ சுக மவுனம் இசை

சரணம்.

செவியுணவுக்கு நிக ரவியுணவு மாகாது
தேடினு முவமை யோர்பொருள் கிடையாது
குவியுமெம் பொருளிசை கொண்டிடில் விரியாது
சூரங்காமன மொடுங்குந் தாவாது இசை (ச)

வ-ம்—காரே திரிலோக சஞ்சாரி. ஒருநாளைக்குமேல் ஓரிடந்தங்கக் கூடாத சாபத்தைப் பெற்றவன். தேவர் முதலான சிஷ்டர்களுக்கு அனுகூலமும், அசுரர் முதலான துஷ்டர்களுக்குப் பிரதிகூலமும் விளைக்கப்பட்டவன். நல்லது, ஆதிசேஷனைப் பார்த்து வருவோம்.

ஆதி— சுவாமி! நமஸ்காரம்.

நாரதர்- விஜயீ பவா! விஜயீபவா!! சகஸ்திரசிரரத்ன கிரீடதாரா! ஏதோ ஒரு ஆழ்ந்தயோசனையில் கவலைகொண்டவனாகக்காணப் படுகின்றாயே?

பாட்டு.

ஆயாபஹாரியான் பீரோஜவான் - என்ற மெட்டு.

இ-ம்-பியாகு - தா-ம்-ஆதி.

பல்லவி.

ஏதுக்கு வாட்டம்நீ இங்கே கொண்டாயதை
ஓதுவாய் ஓ! ஓ! ஓ! ஓ! (ஏ)

அநுபல்லவி.

சாதுக்களுக்குத் தகுந்த விஸ் வாசனே
சர்ப்பாதி யோருக்கு மிக்காதி சேஷனே (ஏ)

ஆதி— பாட்டு. ஷை மெட்டு.

பல்லவி.

நானென்ன சொல்லுவேன் நாட்டிலவமான
மாகினேன் ஆ! ஆ! ஆ! ஆ!

அநுபல்லவி.

கான நிலையுள்ள ஞானமுதல்வரே
கந்தமலர்ப்பிரமன் தந்த புதல்வரே (நா)

சரணம்.

மான மழிந்தால் பிராணன் வாழலாகுமா
மாறாத நிந்தைசொல் சோராது போகுமா (நா)

நார— சரணம்.

என்ன அவமானம் யாராலே நேர்ந்தது
என்றாலும் நன்றாமே நீ மனஞ் சோர்ந்தது (ஏ)

ஆதி— பெண்ணால் விளைந்த பெரும்பழி சொல்லவோ
பேசவென்றாலென்னா லுங்கூசு மல்லவோ (நா)

நார— எந்தப் பெண்ணாலவ மானம் விளைந்தது
இங்குசொல்வாய் கேட்டிசைப்பேன் தகுந்தது (ஏ)

ஆதி— துஷ்டனொருவனே சுலோசனை யாடனைத்
தூக்கிப்போனதால் நேர்ந்த நிந்தைவாதனை (நா)

நார-வ-ம்— ஆனால் தூக்கிக்கொண்டு போனவன், இந்நானென்று உனக்குத தெரியாது போலிருக்கிறது?

ஆதி— ஆம் சுவாமி! தெரிந்திருந்தால் அந்தப்பயலை இந்நேரம் என்ன செய்திருப்பேன்?

நார— தெரிந்தால் அவனை என்ன செய்வதாக உத்தேசம்?

ஆதி— அதென்ன சுவாமி! அப்படிக் கேட்கிறீர்கள்? என்னை இவ்வித அவமானத்திற்குள்ளாக்கிய துஷ்ட துராத்மாவை சும்மா விட்டு வைத்திருப்பேனு? எனது விஷாக்கினியினுல் சுட்டெரித்துப் பஸ்மீகார மாக்கியிருப்பேன்?

நார— சர்ப்பாதிபா! பதருதே! பதருதே, சினத்தையொழி! பெண்கள் எப்பொழுதும் பிறரிடத்தில் போகப்பட்டவரே. பிறந்து வளர்ந்த இடத்திற்கு அவர்கள் உரியவராகமாட்டார்கள் உனது குமாரியென்று தெரிந்திருந்தும், உடன் கூட்டிப் போவானேல், அவனும் ஓர் சுத்தவீரனுகத்தா னிருக்கவேண்டும்? இல்லையேல், சுலோசனையும் உடன்போயிருக்கமாட்டாள் ராஜ குலப்பெண்கள் தாமாகவே வரித்துக்கொள்ள வேத சம்மத முண்டு. எப்படியும் காரியம் மிஞ்சிவிட்டது நீ கோபா வேசங் கொண்டு, கூட்டிப்போனவனுக்கு தீங்கு விளைத்தாலும் உன் புதல்விக்கே பாதகமாக முடியும். இதில் அவமானமென்பது சற்றுமில்லை. உலக வியல்பே, ஆகையால் இனி நீ செய்யவேண்டியது, கூட்டிப்போனவன், இன்னனென்று விசாரித்துணர்ந்து, அவனையும் உன் புத்திரியையும் இங்கழைத்துவந்து தக்க சீதன சன்மான மரியாதைகளைச் செய்வாயாக. பெண்ணைக் கொடுத்தாயோ கண்ணைக்கொடுத்தாயோ என்பது பழமொழியல்லவா? நீயே யோசித்துப்பார்

ஆதி-வ-ம்— தாங்கள் சொல்வதைப் பார்த்தால் மேலுமென்னை அவமானத்துக் குள்ளாக்க நினைத்ததுபோலு மிருக்கிறது. நொந்த புண்ணிலே இருப்புச் சலாகையைப் பழுக்கக்காய்ச்சிச் சொருகுவதுபோல் தங்கள்மொழி என் செவியிலுருத்துகிறது. மடையன் மட்டிப்பிரஷ்டன், குலத்துரோகி, மூர்க்கன், எப்படியோ? என்னையறியாமல் என் புத்திரியை அகப்படுத்திக் கொண்டுபோயிருக்கிறுன். அது விபரந்தெரியாமல், அநேகசாரணர்களை நாடவிட்டிருக்கிறேன். தாங்கள் மேலுமவனுக்கு மரியாதை செய்யச் சொல்லுகிறீர்கள்? அது இருக்கட்டும் தாங்கள் பேசுகிற சமத்காரத்தினுல், அவனை அறிவீர்கள்போலு மிருக்கிறது. அவன் யார்? முதலிற் சொல்லுங்கள்? மற்ற விபரம் பின்பு பேசிக்கொள்ளலாம்?

நா-வ-ம்— நாகராஜா! எனக்கென்ன தெரியும்? நான் உலகவியல்பைச் சொன்னேன் அதற்குள் உனக்கு இப்படி வெகுளி உண்டாகி விட்டதே? அப்பால்?

ஆதி-வ-ம்— இல்லை சுவாமி! தாங்கள் திரிலோக சஞ்சாரியாயிற்றே தங்களுக்குத் தெரியாதகாரியம் ஒன்றுண்டா? ஏன் மறைத்துப் பேசுகிறீர்கள்? விளக்கமாகச சொல்லுங்கள்?

நா-வ-ம்— உரகவேந்தே! என்ன எனக்கவனைத் தெரியுமென்றே தீர் மானித்துவிட்டாய் போலிருக்கிறதே? இன்னுஞ் சற்றுநேரஞ் சென்றால், நான் உடனிருந்து இக்காரியத்தை நிறைவேற்றி விட்டேனென்று சொல்வாய்போலிருக்கிறதே, சரி சரி இன்னொருமுறை வருகிறேன் விடைகொடு.

ஆதி— சுவாமி! கோபித்துக்கொள்ளக்கூடாது கிருபை செய்யுங்கள்.

நார— பன்னக நாயகா! நான் சொல்லுகிறபடி கேட்பாயா?

ஆதி— கேட்பேன் சுவாமி!

நார— ஆனல் நமக்கொரு பிரஸ்தாபம் வந்திருக்கிறது, அதைக் கொண்டு எப்படி நம்புவது.

ஆதி— பிரஸ்தாபப் பட்டவரை சொன்னால் போதுமானது.

நார— அதென்னமோ எனக்குச் சொல்ல மனம் பிடிக்கவில்லை ஒரு வேளை கேள்விப்பட்டது தவறுதலாயிருந்தால்?

ஆதி— தவறுதலாகவிருந்தால் இருந்துவிட்டுப் போகிறது அதனாலே பாதகமில்லை.

நார— பாதகமில்லையே?

ஆதி— இல்லை சுவாமி!

நார— ஆனல் கேள். நான் இன்று இப்படிச் சுற்றிக்கொண்டு வரும் போது லங்காபுரம் போயிருந்தேன்.

ஆதி— சுவாமி! தாங்கள் லங்காபுரம் போனதும், மங்காபுரம் போனதும் நான் கேட்கவில்லை, என்புதல்வியைப் பற்றிய சமாசாரந் தான் கேட்குறேன். அதைச்சொல்லுங்கள்.

நார— அதைத்தானே சொல்ல நினைத்தேன், அதற்குள்ளே பதறுகிறாயே?

ஆதி— இப்பொழுது சொல்ல நினைப்பதுதானே? இன்னும் நினைத்தாகவில்லையோ? இதற்குள்ளே சொல்லப்புகுந்தது லங்காபுரம் போனது கிளைக்கதையாக்கும். சுவாமி! விருதாநேரம் போக்க வேண்டாம் அங்குபோனதும், இங்கு போனதும் என்ற உபாக்யானங்களெல்லாம் எனக்குத் தேவையில்லை என் புதல்வியைப் பற்றிய சமாசாரம் சொல்லுங்கள்?

நார— ஆனாலுமிகு ஆத்திரக்காரனாக விருக்கிறாய் சரி சரி நானிதோ போகிறேன்.

ஆதி— சுவாமி! கோபித்துக் கொள்ளக்கூடாது, இவ்வாசனத்தில் அமர்ந்து சொல்லுங்கள்?

நார— லங்காபுரம் போனபோது;

ஆதி— என்ன சுவாமி! இன்னும் லங்காபுரக்கதையிலேதான் கவனமிருக்கிறது போலும்.

நார— ஆம் அதிலேதான் விஷயமிருக்கிறது.

ஆதி— ஆனால் சொல்லுங்கள்?

நார— லங்காபுரம் போனேனா?

ஆதி— போனதும் போகாததும் யாரைக்கேட்கிறீர்கள்? தங்களுக்கே சந்தேகந்தானோ?

நார— சரி சரி இங்கு சரிப்படாது.

ஆதி— சுவாமி! தாம் கோபிக்கலாகாது.

நார— எனக்கெதிரே இரண்டுபேர் வந்தார்கள்.

ஆதி— என்ன சுவாமி!

நார— அவர்கள் பேசிக்கொண்டு போனதைத்தானே கேட்டது?

ஆதி— நல்லது அவர்கள் பேசிக்கொண்டு போனதில் நீங்கள் கேட்ட பிரஸ்தாபமென்ன?

நார— நல்லது அதுவா? இந்திரசித்து சுலோசனையைக் கொண்டு வந்திருக்கிறானென்ற சமாசாரந்தான்.

ஆதி—

பாட்டு.

எட்டி நில்லும் நாரதரே - என்ற மெட்டு.

இ-ம்-அடாணா—தா-ம்-ஆதி.

பல்லவி.

விடுவேனோ அந்தப்பயலை மட்டிப்பயலை
பொடிப்பயலை தடிப்பயலை பிரஷ்டப்பயலை துஷ்டப்பலை
கெட்டபயலை மிகு (வி)
வேதனையாயவ மானமதாகிய பாதகமேதரு
தீதுசெய் தேகினன் (வி)

அநுபல்லவி.

படுமோசஞ் செய்துபோன குடிகேட னுமவனை
பட்டு விழத்தலை வெட்டி நிலத்தினி விட்டிடலைப்பற
வைக்கு மருத்துவன் (வி)

சரணம்.

மற்றென்னவென் புத்திரியை வஞ்சித்துச்சிறை செய்தவன்
மாநிலத்து வாழ்ந்திருப்பானோ உயர்
மானமதைப் பார்க்கிலும் பிராணனென்ன பிரமாதம்
வந்த நிந்தனையைப் பொறுப்பேனோ

குற்ற மெனக்குப் புரிந்து குலத்துக்கு நிந்தை மொழி
கூறிவிட்டவன் பிழைப்பானோ
கொஞ்சமேனு மஞ்சிடாம லிந்தவாறு செய்தவன்மேல்
கோபமுங் கொள்ளா திருப்பேனோ

குருட்டு நினைவிலே கொஞ்சமேனும் யோசியாது
குற்றஞ் செய்தபாதகனைக் கொன்றலென் கோபந் தீராது
இருட்டு நிறவரக்க ரினங்களெல்லா மிப்போது
ஏதுமில் லாவிதமே எனதார் விஷமானதினால்
எரித்தாடிடுவே னினி (விடு)

திருட்டு வித்தையி லடிக்க லுற்றனன்
திடத்தி லற்புத மிகுத்த புத்திரியைத்
தியக்க முற்றொரு சிறை யெடுத்தான் கண்டு

சிரித்து மற்றவர் பழித்திடத்தகும் விதத்திலுற்றன
கொதித் தெனக்குடல் நிடுக்க முற்றிய
வசை கொடுத்தான்

திருட்டு நற்புகழ் மிகுத் தடுத்தவ
ருரைத்து நிற்கிற வழக்கி லுற்றுயிர்
சிறப்பினைக்குல மது கெடுத்தான்

மிருத்திரர் பெருக்கமும் அரக்கருக்கிணை
நினைத்தற் கிதுவெளிப் படுத்திய செயற்
குறித் தெரியவும் விடுத்தான்

செகத்தி லிப்படியுற்ற விதச்செயல் விளைத்த
அக்கிரமட்டி முகத்திலெட்டி யுதைத்து
மிதித்துமே மடப்பயல் மோதிடுவேன்
உடலோடு மூலாகிய ஆவியுமே
வெளியேக இவ்வேளையில் (வி)

வ-ம்— பாருங்கள் சுவாமி! இட்சணத்தில் அவனைப் பஸ்மீகரமாக்கி விடுகிறேன் ஆ! ஆ!

நா—

பாட்டு.

அள்ளி அள்ளிக்குடிக்கும் - என்ற மெட்டு.

இ-ம்-செஞ்சுருட்டி-ஏகதாளம்

கண்ணி.

கோபத்தி னாலேவருங் கேடு பெருந்தொல்லை
கொள்வார்க்கு லாபமொன்றில்லை கேளென்சொல்லை.
கோதையுன் மாது வாழ்வதின் மீது
நீ நினையாது பேசுதல் தீது

இந்திரசித்தனே வேண்டுவரம் பெற்றவன்
எத்து வித்தைகள் கற்றவன் மாயமுற்றவன்
எத்தனை நாள்நீ யுத்தஞ் செய்தாலும்
வெற்றியு மாகாய் நிச்சயமாகும்

தந்திர மொன்றிருக்கு சாற்றுவே னது
தானே யுபாயமாமது சொல்வேனது
தக்கதத்துவன்றி மிக்கதில்லையின்றி
பெற்றவளே யென்று துக்கநில்லையின்று (கோ)

வ-ம்— ஓ சேஷனே! இந்திரசித்தனை யாரென்று நினைத்தாய்? மகா வரப்பிரசாதம் பெற்றவன், எத்து வித்தைகளில் பயின்று கை தேர்ந்தவன், பொல்லா மாபாவி, தேவர்களும் அவனெதிரில் நின்று போர்புரியார், ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு என்பதுபோல் நீ அவனை வெல்லாய், போருக்கெழுந்தாய், கற்ப கோடிகாலம் யுத்தம் புரிந்தாலும் அவனை வெல்லமாட்டாய். ஆனால் நான் ஒருபாயஞ் சொல்லுகிறேன். அவனே சுலோசனையின் மணமங்கள நிமித்தம் சந்தோஷ பரிதனாகி இச்சாதானம் வழங்கிவருகிறான். நீ அவனிடம்போய் அவன் ஜீவனைத் தானமாகக்கேள் கொடுப்பான் பெற்று உனதிஷ்டப்படி பூர்த்தி செய்துகொள் நான் போய்வருகிறேன். மங்களமுண்டாகுக.

(போகிறார்.)

ஸீன் முடிவு.

---

## ஸீன்—5.

காலம் — காலை.
இடம் — இலங்கை அரண்மனை.
பா-கள் —இந்திரசித்து, ஆதிசேடன்.

## இந்திரசித்து தர்பார்.

ஆதிசேஷன் வருகிறான்.

ஆதி— பிரபு! தமது சீவனை எனக்குத்தானமாகக் கொடுக்கவேண்டும்

இந்தி— தடையில்லை வீரசுவர்க்கம் விரும்பியவர்கள் யுத்தகளத்தில் அன்றி உயிர் விடார் ஆகையால், யுத்தநேருங்கால் அங்கே வந்து பெற்றுக்கொண்டுபோம்.

ஆதி— அப்படியே

(போகிறான்.)

ஸீன் முடிவு.

---

# ஸீன்—6.

காலம் — நண்பகல்.

இடம் — போர்க்களம்.

பா-கள்— இந்திரசித்து, மாயாசீதை, அனுமார் முதலியோர்.

இந்தி— பாட்டு.

ஆயா பஹாரியான் பீரோஜ - என்ற மெட்டு.

இ-ம்-பியாகு—தா-ம்-ஆதி.

பல்லவி.

வீர—வில்லாளி லட்சுமணன் கொல்லாமல் விட்டிடான்
செல்லாது நம் மாயங்கள் — இது நிச்சயம்
செல்லாது நம் மாயங்கள்

அநுபல்லவி.

விட்டநாக பாசமும்பிர மாஸ்திரம்போச்சு இங்கு
விழுந்திறந்த குரங்கெல்லாமிங் கெழுந்திடலாச்சு போரை
விடுத்திடல் பழியேச்சு நினைத்தா
லெடுக்குதே பெருமூச்சு இங்கு
வீணினி யோசனையில் லாமலமராடுவது
வேதைதரும் ஆதலினால் (வி)

வ-ம்— ஆஹா! இதுவே தக்க உபாயம். நம்சாதியிலுள்ள ஒருவனைச் சீதையுருவாக்கி இழுத்து வந்து அநுமான் முதலிய குரங்குக் கூட்டங்கள் முன்காட்டி மயக்கி, அந்த மாயாசீதையைக் கைக் கட்கத்தால் வெட்டிப் பரத சத்துருக்கனர்களையும் கொல்லப் போகிறேனென்று அயோத்திக்குப் போக்குக் காண்பித்து மறைந்து நின்று வேள்விச்சாலை சேர்ந்து நிகும்பலையாகத்தைத் தொட்டுத் துடங்கி நிறைவேற்றுவோம். நிகும்பலை நிறைவேறிய க்ஷணம் ராமலட்சுமணன் எம்மாத்திரம்? ஒரு சில்லம்பால் அவர்களைக்கொன்று வெற்றிக்கொடி நாட்டி வாகைசூடி பிதாவை மகிழ்விப்போம் இதுதான் சமயோசிதம் யுக்தி நல்லது முதல் முதல் மாயாசீதையை நிருமித்துக்கொண்டு வருவோம்.

## மாயாசீதையைத் தலைமயிர்பற்றி இழுத்துவருதல்.

பாட்டு.

**தக்க தக்க தேக்கோ – என்ற மெட்டு.**

இ-ம்-பியாகு - தா-ம்-ஆதி.

பல்லவி.

வெட்டி யெறிவேனுன் பாராய் சீதையை
வீணிலிவ ளால்விளைய லானதுயர் தீர இனி (வெ)

அநுபல்லவி.

கொட்ட மடங்கி இங்கே குரங்கே—உன்
கோபமிக வானபிர தாபமெலாம் போனதெங்கே (வெ)

சரணம்.

வீரமிருந்தா லிவளை நீ காப்பாற்று
விட்டு விடே னிச்சயமாய்
மட்டியடே வெட்டுமுனே (வீர

நேரி லழுகின்றாள் கண்ணால் பாரடா
நெக்குருகி நிற்குநிலை மிக்கவும தக்கவிலை (நே)

வ-ம்— அடே காட்டுக்கனியைத் தின்றுச் சுனைநீரைக் குடித்து, மலைப்பாறையில் படுத்துக்காலங்கழிக்குங்குரங்கே! உங்கள் எஜமானுக்குத் தேவியாகிய இந்தச் சீதையென்பவள் கெதியைப் பார்? ஐயோ! மிகுந்த துக்கத்தை யடைகிறாள், இவ்வளவு அனர்த்தங்களெல்லாம் லங்கையில் நேர்ந்தது இவள் பொருட்டாலன்றோ? இனி அரைட்சணமும் இவளை உயிரோடு விடமாட்டேன். கையிலிருக்கும் இந்தக் கட்கத்தினாலே வெட்டியெறிகிறேன், புஜந்தட்டி, கெக்கலிகொட்டி, அட்டகாசஞ்செய்த உனது கொட்டம் இத்தோடு அடங்கிற்று? இதோ பார் இவள் கண்ணீர் பெருக நெக்கு நெக்குருகி, அழுகிறாள் உனக்கு வீரமிருந்தால், என்கையிலே நின்றும் இவளை விடுவித்துக் கொள்ளடா பார்ப்போம்?

மாயாசீதை— பாட்டு

பட்டாபிஷேகம் படைத்திந்த - என்ற மெட்டு.

இ-ம்-தேசிகதோடி—அடதாளம்-சாப்பு

கண்ணி.

ஆதர வேதுமி லாது வருந்துவ
தாலிது வேளையில் நேரினில் வந்து
நீ எதிராயிருந்து சோகம தாவதெலா முணர்ந்து
வேதைதீர நாடிடாத சேதிசொல்வாய் மொழிந்து

அன்று கணையாழி கொண்டு கடல் தாவி
வந்து கரமீது தந்தெதன தாவி
ஒன்றை நினைந்தவனே அனுமா னென்றபெருந்தவனே
இன்று வேதை நன்றுதீர என்று மிருந்தவனே

வ-ம்— ஐயா! அனுமானே! நானென்ன செய்வேன்? இந்த ராட்சசப் பாவியானவன் என் கேசத்தைப்பற்றி இழுத்துவந்து கொல்லத் துணிந்துவிட்டானே. இந்த வேளையில் எனனைக் காப்பாற்ற உன்னையல்லாமல் யாரிருக்கிறார்கள்? என்னிலையை நேரிற் கண்டும் சும்மாவிருப்பது தர்மமா? அன்று கடல்தாண்டிக் கணையாழி கொண்டு வந்து கொடுத்து என்னுயிரை ரட்சித்தது போல் இன்றும் ரட்சிக்கலாகாதா? நீயே துணை அபயம்! அபயம்! காப்பாற்று காப்பாற்று.

அனுமான்— பாட்டு.

நாயகர் மாளா நேருமேயானல் - என்ற மெட்டு.

இ-ம்-செஞ்சுருட்டி-ஏகதாளம்

தோறு.

ஐயாவே கோபம் ஆமோ ஆட்சேபம்
ஆகுதே தாபம் ஐயையோ பெண்பாவம்
அதனல் விடுவீர் அணு காதீர்கொல்லச் சமீபம்

இந்திரசித்து— மூடு.

வெட்டாமல் விட்டு விடேனடா
வேதனையாவுமே யிவளாலே
வந்ததனலே கட்கமிதனலே யிங்கு (வெ)

அனுமான்— தோரு.

போற்றினேன் பாதம் பொருந்துஞ் சமேதம்
பூவைக்குச் சேதம் புரியவேண்டாம்நீதம்
புவிமேல் அடைவீர் மிகு புகழாகியவி னோதம் (போ)

இந்திர— மூடு.

என்மனம் சற்று மிளகாதடா
இங்கிவள் செத்திடில் பே
ரேது ஒன்றும்நேராதுதுன்பம்வாராது மூடா (என்)

அனுமான்— தோரு.

பெண்பழி காரம் பெருமைக்குத் தூரம்
பெருகுமோ சாரம் பேதை துன்பம் விஸ்தாரம்
பிடிநீர் விடுவீர் புகழ்பெற்றுக்கொள்ள விந்நேரம் (பெ)

இந்திர— மூடு.

சேதியெல்லா மெனக்குத்தெரியு மடா
எட்டிநீ யோடடா நில்லாமல்
ஒன்றும் சொல்லாமல் விடேன் கொல்லாமல் (சே)

அனு-வ-ம்— ஐயா! இந்திரசித்து மகாராஜனே! உமது பாதத்தைப் பணிந்து கேட்டுக் கொள்ளுகிறேன் இந்தப் புண்யவதியோ ஒன்றுமறியாத பேதை, இவளைக் கொல்வது பெருந்தோஷம், உம்மைப்போன்ற யுத்தவீரரெல்லாரும் நகைக்கும்படியான, காரியத்தில் நீர் பிரவேசியாதிருப்பது நலம். என் வார்த்தையைக்கேளும் ஸ்திரீஹத்தியானது, இம்மையில்பழியையும், மறுமையில் ரௌரவாதி நரகத்தையுங் கொடுக்கும். வேண்டாம் உமது கோபத்தைச் சாந்தப்படுத்தி, இவளைக் கொல்லாமல் உயிரோடு விட்டுவிடும்.

இந்தி-வ-ம்— மரங்களிலேறிக் கொப்புக்குக் கொப்பு தாவித்திரியும் குரங்கே! நீ யென்ன சொன்னபோதிலும் இவள் விஷயத்தில் என்மனம் சற்றேனு மிளகாது. இதோ வுன் கண்முன்பாகவே இவளுடைய சிரசை வெட்டி யெறிகிறேன் பார்.

அனுமான்— தர்க்கப் பாட்டு.

கண்ணிழந்து வாடலானேம் – என்ற மெட்டு.

இ-ம்-செஞ்சுருட்டி—தா-ம்-ஆதி.

கண்ணி

செய்வேனையா வுமக்குத் தொண்டு
சித்த மென்மேல் கருணை கொண்டு
மெய்யா யென் தாய்விசனங் கண்டு
வெட்டா விட்டால் சுகிர்த முண்டு

காமேலையெல்லாம் – என்ற மெட்டு.

இ-ம்-பியாகு—தா-ம்-ஆதி.

இந்திர— பாட்டு.

பக்தி புரிந்து பணிகின்றவன் போலப்
பாசாங்கு செய்து பசப்புகிருய்
இத்தினங்கொல்லாம லிவளை விடமாட்டேன்
இதனை மனதி லெண்ணு நன்ருய்

வ-ம்— அடே வானரா! பக்தி செய்து பணிபவன்போல மிகப் பாசாங்கு செய்கிருய் உனது பசப்பு வார்த்தைகளெல்லாம் எனக்குத் தெரியும் இவளைக்கொல்லாமல் உயிரோடு விடுவேனென்று கனவிலுமெண்ணுதே. இதோ பார் துண்டிக்கிறேன்.

அனுமான்— பாட்டு.

இணையில்லாத சுத்த வீரா
ராவணேஸ்வரன் குமாரா
துணையில்லாத பேதை பாசாய்
துதித்தே னிவளை விடுத்துச் சேசாய்

இந்திரசித்து— பாட்டு.

வாலை வளர்த்தியென் தந்தைக்கு மேலே
வதிந்திருந்து சொன்ன வீரமெங்கே
காலைப் பிடித்துக் கருணைசெய் யென்று
கதறியழுவது மேனே, யிங்கே

வ-ம்— அடே மற்கடமசகமே! நீ முன் தூது வந்த நாளில். என் தந்தையின் சிம்மாசனத்திலும் உயரமாக, உன் வாலை வளர்த்தி

யாசனமிட்டு அதன்மேலிருந்து கொண்டு, கெம்பீர சத்தத்தோடு ஆனையைப் பூனையாக்கிவிடுவேன், பூனையை ஆனையாக்கி விடுவேன் சீதையை விடுகிறாயா? ஜீவனை விடுகிறாயா? என்று கேட்ட உன் வீரப்பிரதாபங்களெல்லாம் 'இப்பொழுதெங்கே போயிற்று? என் காலைப்பிடித்து நின்றாயானாலும்கருணை சற்றேனுங் கொள்ளேன். இங்கு நடந்தேறிய எல்லா விபத்துக்களும் இவளாலேயே நேரிட்டபடியால் இவள் ஒழிந்தால் மேல் நடக்கக் காத்துக்கொண்டிருக்கும் அனர்த்தங்களெல்லாம் இத்தோடு பறந்தோடுமென்பது நிச்சயம் தன்னிமித்தம் இதோபார் உடல்வேறு தலைவேறாகக் கூறுபடுத்தி விடுகிறேன்.

அனுமான்— பாட்டு.

சேவை செய்தேன் முகத்தை நோக்கும்
சீற்றங் கொண்ட சினத்தைப் போக்கும்
பாவை யென்று யிவளை நீக்கும்
பதிலுக் கென்றலையைப் போக்கும்

இந்திரசித்து— பாட்டு.

ஆப்பி லகப்பட்ட பேய்க் குரங்குபோல்
அகப்பட்டதால் துதி செய்கின்றாய் நீ உன்
னேய்ப்பெல்லா நன்றா யெனக்குத் தெரியும்
இடர் நீங்கினால் நிந்திப்பாய் வாய்மிஞ்சி

வ-ம்— ஏ! ஆப்பிலகப்பட்ட பேய்க்குரங்கே! விடவுந் தொடவு முடியாத எக்கச் செக்கமான நிலையில் நீ இப்பொழுது மாட்டிக் கொண்டதினாலே பணிந்து புகழ்ந்து புகழ்ந்து, கெஞ்சிக்கெஞ்சி கைகுவித்துக் கும்பிட்டு மன்றாடுகிறாய், உன் எத்துவித்தை மாயாஜால ஜெகஜால மொழி வினையங்களையெல்லாம் நான்நன்றா யறிவேன். இந்தத் தொல்லையொன்று நீங்கினால், என்னைப் பலவாறு வாய்க்கு வந்தமட்டும் தூஷித்து நிந்திப்பாய். யானை தன் தலையில் மண்ணை வாரிப்போட்டுக் கொள்வதுபோல், அந்த அவமானத்தை யடைய வழிதேடுவேனோ? உனக்கு வல்லமை இருந்தால், இவளுயிரைக் காப்பாற்று. இதோ கண்மூடிக் கண் திறக்குமுன் இவளை தலையைக் கொய்து வீழ்த்துகிறேன்.

அநுமார்— ஐயா! நீர் சற்றேனும் சந்தேகப்படவேண்டாம இந்த வேளை பெண்ணரசியின் பிராணாபத்து நீங்கினால், பின் தம்மை

நிந்திப்பேனென்ற உமது அபிப்பிராயத்தை நீக்கிவிடும், இந்த அம்மணி தலையை வெட்டுவதற்குப் பதிலாக என் தலையை வெட்டிவிடுமென்று சம்மதத்தோடு மனப்பூர்த்தியாக முன்னமே உம்மிடம் சொல்லியிருக்கிறேன் இன்னும்,

பாட்டு.

சும் சும் பியாரி தேரி - என்ற மெட்டு.

இ-ம்-இந்துஸ்தான் தோடி—தா-ம்-ஆதி.

பல்லவி.

சத்தியஞ் செய்துதருவேன் பத்தியிவளை விட்டால்
இத்தினமுத லடிமை யாவேனே

அநுபல்லவி.

நித்தமுமது பணி தவறிடமாட்டேன
நெறிவிலகியுமலட் சியஞ்செய்ய மாட்டேன்
நினைவீர் தயவாய் உரைநான் பிசகேன்
நேரிழையை விட்டுச் செல்லும்
நீரெனை யழைத்துச் செல்லும் (சத்)

வ-ம்— ஐயா! சந்திர சூரியர் தெற்கு வடக்காகமாறினும் நான் சொன்ன வார்த்தையில் நின்றும் பிறழமாட்டேன் இந்த மாது சிரோமணியைக் கொல்லாமல் விடுவீராகில், இன்று முதல் உமக்கு நான் அடிமைக்காரனுகி, நீர் காலாவிட்ட ஊழியங்களை யெல்லாம் என் தலையாலே செய்துவரச் சம்மதப் படுகிறேன். இதுசத்தியம்! சத்தியம்! முக்காலும் சத்தியம்.

இந்திர— அடே வானரப்பயலே! யாரிடத்தில் இந்த ஏமாற்றமொழி பேசுகிறாய்? பிரமாணஞ் செய்து கொடுத்து இவளைத் தப்புவித்தபின்பு நாமும் ஓடிப்போய்விடலா மென்றோ நினைத்தாய்? இதேது ஒருக்காலும் நடைபெறாத காரியம். இவள் ஒரு உயிரோடு விடுவேனென்று நினையாதே இவளை யிப்பொழுதே கொன்று வடக்குநோக்கிக் ககனமார்க்கமாக அயோத்திக்குப் போய் பாத சத்துருக்கனர் முதலானவர்களையும் கொன்று, குவித்து, மீளுகிறேன் பார். இவ்வளவு செயலும் எங்கிருக்கின்றன வென்று கேட்பாயோ?

ஷை மெட்டு. பாட்டு.

பல்லவி.

இத்தனை யாட்டமு மிந்தக் கத்தியிலிருக்கிறது
புத்தியில்லாப் பேய்க்குரங்கே பாராய் நீ

அநுபல்லவி.

சத்தியஞ் செய்து தருவேனென்றுயே மாற்றி
சடுதியிலோட எண்ணி சாற்றிஞய் போற்றி
தருமா யிதுவே ஊயிலே தலைபார்
சார்ந்தயோத்தி செல்லுகிறேன்
பாய்ந்துள்ளோரைக் கொல்லுகிறேன் (இத்)

(மறைதல்)

அனுமார்— பாட்டு.

நாயகர் மாள நேருமேயானல் – என்ற மெட்டு.

இ-ம்-செஞ்சுருட்டி—ஏகதாளம்.

பல்லவி.

இனியென்ன யுத்தம் இனி யென்ன வெற்றி
யென்தா யிறந்தபோது எளியேனுயிர் வாழ்வது
ஏற்காதினி யேற்காது

(மூர்ச்சையாகுதல்.)

விபீஷணன்-வ-ம்— இது என்ன விபத்து? மாருதியானவர் என்ன இப்படி அழுது புலம்புகின்றார்?

தர்க்கப் பாட்டு.

மூட்டை கடிபொறுக்க மாட்டேன் – என்ற மெட்டு.

இ-ம்-நாதநாமக்கிரியை—தா-ம்-ஆதி.

பல்லவி.

அநுமாரே அழுதழுது வாடுவதென்ன நீரே
அந்தச் சொல்வீ ரநுமாரே

அநுபல்லவி.

மனதிற் கவலையின்றி மொழி கண்ணீர் பக்கம்
மருவி நுரையவிம்மி பொருமியதுக்கம் (அநு)

அனுமார் பல்லவி.

போச்சே நாம் பட்ட பாடெல்லாம்
பாழாகப் போச்சே விபீஷணரே போச்சே

அநுபல்லவி.

ஏச்சும் பழியும் விளைந்திட இந்திரசித்தால்
இங்கு நடந்திருக்கும் விதத்தினை நினைத்தால் (போச்சே)

விபீஷணன்— சரணம்.

எட்டுநாள் யுத்தத்திலும் நாமேதான் ஜெயித்தோம்
இன்றுபத்து நேர்ந்துசஞ் சீவியால் பிழைத்தோம்
பட்டொளி வாளுலை ராவணனென்று மதித்தோம்
பாரெலா மொன்றுனராம சாமியைத் துதித்தோம் (அ)

அநுமான்—

தாயைக் கேசம்பற்றிவந் தான் படுபாவி
தாளைப்பிடித்துக் கெஞ்சி னேன்சொல்லிக்கூவி
மாயக்கார வஞ்சக மடையனுந் தாவி
வாளைக்கொண்டு வெட்டினன் அகன்றனளாவி (போ)

விபீஷணன்—

மனமயக்க மிலையேல் கனவது கண்டு
மதியுந் தெளிந்திடாமல் மயவிலமருண்டு
நினைவி லுண்மையென்றிருப்பீ ரதுகண்டு
நிச்சய மில்லாதுளப் படி நம்புவதுண்டு (அ)

அநுமான்—

கண்ணாலே கண்டேனித் தரிசனைக் காட்சி
காலவினைப் பயனல் நேர்ந்தது சூட்சி
பெண்ணு ளிறந்தபின்பு பேரென்ன மாட்சி
பின்னமதி லொன்றுமில்லை என்மன மறிந்த சாட்சி (போ)

விபீஷணன்—

இப்படி நடப்பதற் கேதுவு மில்லை
இதனை நினைத்தாலொரு மாயையு வல்லை
எப்படியு மிதனி விருக்குது தொல்லை
என்ன விதத்தில்மறுப் பது மதுசொல்லை (அ)

அநுமான்—

கைப்பாலவளைப் பற்றிக் களம் வந்து நின்றான்
காப்பாற்றடா வென்றுநிக் தனைகளும் புகன்றான்
அப்பாலே தலைதுடித் தையோ கொன்றான்
ஆகாயத்தின் வழி அயோத்திக்குச் சென்றான் (போ)

வ-ம்— ஐயா விபீஷணரே! நீர் சந்தேகப்படவேண்டாம் என் கண்ணாலே பார்த்தேன். துஷ்டச் சண்டாளனாகிய இந்திரசித்தன் நமது ஸ்ரீராமபிரானின் தேவியாகிய ஜானகிமாதுஸ்திரீயினது கேசத்தைப்பற்றி, இழுதது வந்து, என் கண்முன்பாகவே, நான் எவ்வளவு கெஞ்சி அவன் காலைப் பிடித்துக் கும்பிட்டு வணங்கி மன்றாடிக் கேட்டும், விட்டுவிடாமல், தலையை வெட்டியெறிந்து, பரத சத்துருக்கனர்களையும் கொல்லுகிறேனென்று சொல்லி வடக்குமுகமாக, அயோத்திக்குச் சென்றான். இனி என்ன யுத்தம்? வேண்டியிருக்கிறது? எநதப்பொருளை மீட்க வேண்டுமென்று போர்தொடங்கிப் பாடுபட்டு வந்தோமோ, அந்தப்பொருள் அழிந்துபோய்விட்டது. இனிச் சண்டையிட்டு வெற்றியடைவதில் என்னலாபம்? இவ்வளவுதான் நமதெல்லோருக்கும் உயிர்வாழ்க்கை கருணையே உருவாகிய ராமச்சந்திரமூர்த்தி இதனையறிந்தால், அவர் மனம் என்னபாடுபடும்? தருமந்தோல்வியடைய, அதருமம் வெற்றியடையுங் காலமாயது இனி யென்ன செய்வது? எனக்கு ஒன்றுந் தோன்றவில்லையே? சாமியிடத்திற்போய் இங்கு நடந்த விஷயங்களை வாய் கூசாமல் நானெப்படிக் கூறுவேன்?

விபீஷ— ஆஞ்சநேயரே! இந்திரசித்தன் மாயமந்திரவல்லவன் உமது கண்முன்பாக நடந்தேறிய யாவும், உண்மையாகவே யிருக்கமாட்டா, அவனுடைய செகஜால வேடிக்கையாகவே யிருக்கும் காதனாலென்றால்:— உத்தம பதிவிரதா சிரோமணியாகிய ஜானகியம்மன் கேசத்தைப்பற்றி இருப்பானானால், அந்தட்சணமே பஸ்மீகரமாகி ஒழிந்திருப்பான். இவ்விஷயங்களைப் பின்பு சவிஸ்தாரமாக அறியலாம், நீர் கவலைப்பட வேண்டுவதில்லை. நான் வண்டுருவமெடுத்து, இலங்கையுட் பிரவேசித்து, எல்லாவிபரங்களையும் கண்ணாலும், காதாலுமுணர்ந்து வருகிறேன் அதுவரை நீர் பொறுமையாயிருக்கக் கேட்டுக்கொள்கிறேன்.

அநுமார்— விபீஷணரே! அதுவும் நியாயந்தான். கால்தாமதம் செய்யாமல் உண்மையறிந்து வந்து சொல்லும்?

விபீஷண— அப்படியே (போகிறுன்.)

ஸீன் முடிவு.

## ஸீன்—7.

காலம் — பிற்பகல்

இடம் — பாசறை.

பா-கள் — ராமர், லட்சுமணர், விபீஷணர், அநுமார்.

ராமன்— பாட்டு.

என்னவிதி - என்ற மெட்டு

இ-ம்-எதுகுலகாம்போதி-தா-ம்-திரிபுடை.

பல்லவி.

கண்மணி சீதை போனபின் கையிலெனக்கோ வில்லு
காணிலேன் ஏதுந் தோணிலேன்

அநுபல்லவி.

எண்ணி யெண்ணிப் பத்துமாதம் இருந்தாளே பாழுஞ்சிறையில்
இந்திரசித்தன் வாளினுலே இறந்தாளே யிந்தத்தரையில் (க)

சரணம்.

அண்டையய லார்நகைக்க ஆப்தமானேருந் திகைக்க
ஆனதே மானம் போனதே
சண்டையினி வென்றுலென்ன சாவுவந்து நேர்ந்தா லென்ன
தக்கலாப மொன்றுமில்லை தாருமானை யென்றுசொன்ன (க)

விபீஷணன்— பாட்டு.

இ-ம்-சங்கராபரணம் - தா-ம்-ரூபகம்.

பல்லவி.

கண்டுவந்தேனய்யனே கற்பரசியை (க)

அநுபல்லவி.

அண்டருங் காணு அசோக வனத்திலே
அரக்கப் பெண்டுக ளென்னும் புலிக்கூட்டமினத்திலே (க)

சரணம்.

இந்திரசித்தன் வெட்டி யெறிந்தது மாயாசீதை
இருக்கிறு னிகும்பலை வேள்விச்சாலையில் பேதை
முந்திவேள் விமுடிந்தால் மூளைக்கும் நமக்குவேதை
முடிக்கும் வேள்விகெடுக்க இயற்றவேணுமு பாதை (க)

வ-ம்— ஐயனே! எங்கள் அன்னையார் அசோகவனத்தில், தங்கள் திருநாமத்தை உச்சரித்துக்கொண்டு ராட்சச ஸ்திரீகள் மத்தியிலழுதகண்ணீருஞ் சிந்தையுமாக உயிரோடிக்கிறுர்கள். அந்த மடையன் இந்திரசித்தன் வெட்டி யெறிந்தது, அவன் மந்திர பலத்தால் உண்டாக்கிய மாயாசீதையே. இதிற் கொஞ்ச மேனும் பிசகில்லை. மூர்க்கன் அயோத்திக்குப் போக்குக் காட்டி வேள்விச்சாலைக்குப் போய் நிகும்பலையாகத்தை இயற்றுகிறுன் அந்த யாகம் நிறைவேறிவிட்டால், அவனை வெல்லுவதற்கு யாராலுமுடியாது. ஆகையினலே இப்பொழுதே யாக விக்கினஞ் செய்யவேண்டும். கட்டளை கொடுத்தனுப்புங்கள் சாமி!

ராமர்— அப்படியா?

விபீஷ— ஆம் சுவாமி! உண்மையே

அனுமார்— பாட்டு

சொல்லாமொழி சொன்னுரடி - என்ற மெட்டு.

இ-ம்-பியாக்—ஏகதாளம்.

பல்லவி.

இந்திர சித்த னிருக்கிறுனு
இன்னெரு வேள்வி யியற்றுறுனு

அநுபல்லவி.

மந்த மடப்பயல் நொந்தலறப்பறி
அந்த மகத்தெரி சிந்தை யுருக்குவன் (இ)

சரணம்.

புந்தியில் வஞ்சனை முன்னுட்டிப்
போறு னயோத்திக்குப் போக்குக்காட்டி
பொடிபட்டவ னுடல் முற்றினு
மொடி பட்டுயிர் மடியச் செய்வேன் (இ)

மாயவுருச் செய்து பேர்மாற்றி
வாடவிட்டா னென்னை யேமாற்றி
மாநிலமீதினி லோருதை யாலவன்
மாள விடேனெனில் நானனுமானலன் (இ)

வ-ம்— விபீஷணரே! இந்திரசித்தன் வேள்வி புரிந்து கொண்டிருக்கிருனு? கபட மார்க்கக்காதகன். மாயத்தாலே சீதையம்மனைப் போல் உருவுண்டாக்கி, என்னை யேமாற்றி மயக்கிவிட்டானே? நானும் உண்மையென்று நினைத்து ஏமாந்து மோசப்போனேன் இனி அவனை எளிதில் விடப்போகிறதில்லை. ஒருதையினுலே விழுத்துகிறேன் சுவாமி! உத்தரவு கொடுக்கவேணும்.

ராமர்— ஆஞ்சநேயரே! சற்றுப் பொறுத்துக்கொள்ளும். பாந்தவா லட்சுமணு!

லட்சு— அண்ணு! ஆக்ஞை யேதுவோ?

ராமர்— பாட்டு.

நாமே முகமது முஸ்தபா - என்ற மெட்டு.

இ-ம்-பியாகு—அடதாளம்.

பல்லவி.

தம்பி விரைந்து நீ சென் றிந்திர சித்தன்
தலைகொண்டு வந்திடுவாய்

அநுபல்லவி.

அம்புக்கம்புவிடு வேனுக்கு வேல்விடு
ஆயுதத்தாற் கொன்றிடு (தம்)

சரணம்.

கொம்புத்தொடைகள் சமய மறிந்து
குறிதவருமற் றெறடு
குற்றமுமுற்றிக் கற்ற சமர்த்தைக்
காட்டியே யின்று (தம்)

வம்பனவன் செய்நி ரும்பலை யாகத்தால்
துன்பம் விளைந்திடுமே
வஞ்சகனந்த வம்பினுல் வந்த
துன்பமெல்லாங் கெட் டோடவே இன்று அடே (தம்)

மாயாஸ்திரத்தைப் பகைவன் விட்டால் தேடி
நீ ஞானாஸ்திரந் தொடு
தீயாஸ்திரத்தை யவன் விட்டாலுமே நீ
வருணாஸ்திரத்தை விடு
மேதினி மீதவன் வாழ்வினி யேது
போர்வீரரோடு நேரில் போராடு (தம்)

வ-ம்— லட்சுமணா! இந்திரசித்தனால் விடப்பட்ட அஸ்திரங்களுக்கும் பகைப்பாணங்களைக் குறிதவறாமல் தொடுத்து நடுபாதியில் கண்டித்துவிடு, அவன் மாயாஸ்திரத்தைத் தொடுப்பானானால் இதோ நான் கொடுத்த இந்த ஞானாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய் அவனது கெட்ட ஜால தந்திரமந்திர விநோதங்களை யெல்லாம் இந்த அஸ்திரம் வெட்ட வெளிச்சப் பட்டப் பகல்போல் விளக்கிக் காட்டிவிடும். அவன் ஜம்பம் இனிச்செல்ல மாட்டாது ஆனால், இன்னுமொன்று சொல்லுகிறேன். நாய் கடித்ததென்று மாறி அந்த நாயைக் கடிப்பவருண்டோ? இல்லை அதுபோல் அந்த மதியில்லாமடையன் உன்னை வசைபேசி நிந்தித்தாலும் நீ பொறுத்துக்கொண்டு காரிய சித்தியில் கவனஞ் செலுத்துவதுதான் தக்கது. நல்லது காலதாமத மாகின்றது இங்குள்ள வானர சைன்யங்களோடு போய் அதி சீக்கிரமாக வேள்வியைப் பாழாக்கி அவன் தலையை வெட்டி என்னிடங் கொண்டு வந்து சேர்ப்பாயாக.

லட்சு— பாட்டு.

எண்ண மெனக்கு முண்டு - என்ற மெட்டு.

இ-ம்-பியாகு—தா-ம்-ஆதி-

பல்லவி.

உத்திரவுப்படியே இன்று ஓடி அவனோடு
போராடிவாரேன் தமது (உ)

அநுபல்லவி.

அஸ்திர சஸ்திரத்தாலும் நிலை கண்டு
அந்தப் பாதகன் ரத்தம் சிந்தத்தலையைக் கொண்டு (உ)

சரணம்.

ககனம் பறந்தாலும் கடலிற் புகுந்தாலும்
கண்ட துண்டப்படுத்தி இன்றுவாரேன் தமது (உ)

மாயங்க ளின்றுசெய் தாலும் விடமாட்டேன்
மாண்டு விழாதுபோனால் மீண்டு வரவுமாட்டேன் (உ)

வ-ம்— அண்ணு! தங்கள் கட்டளைப்படி இந்திரசித்தனது தலையைக் கொண்டு வந்து தங்களது பாதார விந்தத்தில் சேர்ப்பிக்கிறேன் விடை கொடுங்கள் நமஸ்காரம்.

ராமர்— மங்களமுண்டாகுக விரைவிற் போய்வா எனது பூரண ஆசீர்வாதம்! பூரண ஆசீர்வாதம்! (போகிருர்கள்)

ஸீன் முடிவு.

---

## ஸீன்—8.

காலம் — மாலை
இடம் — யாகசாலை.
பா-கள் — விபீஷணர், அநுமார், இந்திரசித்து, இலட்சுமணர்.

விபீஷ— இதுதான் வேள்விச்சாலை, நிகும்பலை யாகம் நிறைவேற்று முன் நமது வேலையை முடிக்கவேணும்.

அநுமார்— இதற்குள்ளேதான் யாகச்சடங்குகள் நிறைவேற்றிக் கொண்டிருக்கிருனே?

விபீஷண— ஆம்!

அநுமார்— நல்லது நீங்களெல்லோரும் இந்த யாகசாலையைச் சுற்றி நான்கு புறமும் சாக்கிரதையாக நில்லுங்கள் நானவனை கூவி யழைக்குறேன்.

பாட்டு

இ-ம்-பியாகு—தா-ஆதி.

கண்ணி.

இந்திரசித்து மடப்பயலே
இங்கு ஒளிந்த தடிப்பயலே
நிந்தனையுற்ற பறைப்பயலே
நீதியற்ற நெறிப்பயலே
நீ மறைந்ததுதான் ஆகா தெரிந்தனனுன்

வ-ம்— நான் எவ்வளவு உரக்கக் கூவியழைத்தும் வராதிருக்கிருன் காரண மென்ன?

விபீஷ— மாருதியாரே! நிகும்பலையின் ஆகுதி பூர்த்தியாகுந் தருண மா யிருக்கலாம் தாமதிக்கலாகாது.

அநுமார்— பாட்டு.

வஞ்ச நிகும்பலை யெனும் யாகம்
வந்து புகுந்தது மவி வேகம்
நெஞ்சுர மிஞ்சுமுனது தேகம்
நேர்ந்தது பெரிய மரண யோகம்
நீ வெளிப்பட்டா ஆகா தொழிந்த தடா

வ-ம்— விபீஷணரே! இதற்குள் அவனில்லைபோலும், இருப்பானு ளுல் நான் பேசிய நிந்தை மொழியைக் கேட்டுச் சகிப்பானு? நேரிலவனைப் பன்முறை கண்டிருக்கிறேன். நல்ல யுத்த வீரன் தான் அப்படியிருக்க ரோசமில்லாதவன் போல நிந்தைச் சொல்லைச் சகிப்பானே? சகிக்கமாட்டான் அங்கு அவனில்லை போலும்

விபீஷ— அநுமந்தரே! அப்படி நினைக்கவேண்டாம் காரியசித்தி பெற விரும்பி யாகச்சடங்கில் கருத்தைச் செலுத்திக் கொண் ருக்கிறுனென நினையும் இனித்தாமதிக்கலாகாது.

அனுமார்— பாட்டு.

மந்திர மாயஞ் செல்லாது
மாளுமோர் செய லல்லாது
இந்த நாளுன் னுயிர் நில்லாது
எழுந்துவாபதிற் சொல்லாது
ஏதும் நோக்கலையோ என்சொல் காதுகேட்கலையோ

வ-ம்— அடே துஷ்டப்பிரஷ்டா! நானெவ்வளவோ சத்தமிட்டுக் கூப்பிடுகிறேன் உனக்குக் காது கேட்கலையோ?

விபீஷ— ஆஞ்சநேயரே! முன்முறை ஏமாந்ததுபோல் இப்பவும் ஏமாந்துபோகாதீர். நிகும்பலை யாகம் நிறைவேறி விடுமானுல் நாமிதுவரைபட்ட பிரயாசைகளெல்லாம் விருதாவாகப் போய் விடும் சீக்கிரம் இந்த யாகசாலையை யழிப்பதே தகுதி.

அநுமார்— இதோ (அழிக்கிருன்)

இந்திரசித்து— என்ன ஆச்சரியம்! இது மகத்தான விபத்தாக இருக்கிறது நாம் அயோத்திக்குப் போக்குக்காட்டி வந்தோமே நமது அந்தரங்க சமாசாரங்களை இவர்களுக்கு எப்படித் தெரியவந்தது?

அநுமார்— பாட்டு.

இச்சையுடனியமுனை தருவாயோ — என்ற மெட்டு.

இ-ம்-செஞ்சுருட்டி— தா-ம்-ஆதி.

துக்கடா.

வந்தகப்பட்டான் விடலாகாது
ஆகாது விடலாகாது (வந்)

அந்தரத்தி லேபுகுந்து பாதாளம்புகுந்து ஓடுவான்
ஆஹாரகம்மேல் லோரையும் மயக்கஞ்செய்து போடுவான்
வஞ்சநெறி கூடுவான மந்திரங்கள் நாடுவான்
வானர வீரரே வேலிபோல் சூழுவீர் (வந்)

இந்தவேளை விட்டுவிட்டால் வந்துமேசெய் முழுப்பாதகம்
எந்தனையே முன்னிவ னியற்றினான் பெருஞ்சேதம்
இன்னும் பலஅன்னீதம் இயற்றுவான பிரமாதம்
இப்பொழு தப்புறம் தப்புவான சுற்றுவீர் (வந்)

ஆடுதிருடுங் கள்ளனைபோ லங்கிங்கும் விழிக்கிறான்
அப்புறத்தி லோடவழி ஆலோசித்து நிற்கிறான்
அங்கமும் பதைக்கிறான செங்கையை முறுக்கிறான்
ஆனையால் யாவரும் வேகமாய்ச் சூழுவீர் (வந்)

வ-ம்— அடே துஷ்டா! எங்கேயோடுவதற்குவழி தேடுகிறாய்? இனி உன்னை எளிதில் விடப்போகிறதில்லை உன மாயாமந்திர ஜம்பம் இனி யென்னிடத்திற் பலிக்காது, அயோத்திக்குப போக்குக் காட்டி, நிதும்பிலையாகஞ் செய்ய வந்தாய் திருட்டுப்பயலே! நில்லு நில்லு உன் பல்லு முப்பத்திரண்டையும் ஒரு குத்திலே யுதிர்த்து பொக்கவாயனுக்கி விடுகிறேன் பார்.

இந்தி— நாம் செய்யப்புகுந்த யாகத்தினுடைய பெயரை இவனுக்குச் சொன்னவர் யார்? ஓஹோ தெரிந்தேன தெரிந்தேன! அதோ நமது சிற்றப்பன விபீஷணன நிற்கிறான இவனே நமது மர்மங்களை யெல்லாம் வெளிப்படுத்தி, யாக விக்கினம் செய்துவிட்

டான் இனி நமது காரியமெங்கே சித்தியாகப்போகிறது? இந்த மட்டோடு விட்டுவிட்டு ஓட்டம்பிடிக்கலாமென்றாலும் ஏதேது இந்தத்திக்குரங்குகள் நம்மைச் சும்மாவிடமாட்டாது. எல்லாவித மேன்மைகளையும் சிற்றப்பனாகிய இந்தக் குலத்துரோகியே கெடுத்துவிட்டான்.

பாட்டு.

என்ன கேள்விமுறை - என்ற மெட்டு.

இ-ம்-பிலஹரி—தா-ம்-ரூபகம்.

பல்லவி.

குலத்துக்குத் துரோகி நான்
குறித்த வேள்வியை உரைத்துப் பாதியி லழித்தா யாதலால் (கு)

அநுபல்லவி.

தலத்துக்கும் சொந்தக் குலத்துக்கும் பந்து
நலத்துக்கு மண்ணன் பலத்துக்குங் கேடு
தப்பா மற்செய்தாய் ஒப்பா என்றன்சிற் றப்பா ராட்சச (கு)

நான் செய்யும் வேள்வி நீ சொல்லாவிடில்
தான் தெரிவாரோ என் கெடுத்தனை
தாம்பேண் வாரைக்கொல் பாம்பே கோடரிக்காம்பே நீயடா

பந்து வர்க்கங்கள் யாவரையுங் கொன்று
பாரர சாளக் கோரினை யின்று
பாவி பாழ்செய்தாய் வேள்வி யுன்னாலென் னாவி போகுது (கு)

வ-ம்— அடே சிற்றப்பா! நீ குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக்காம்பு பாலூட்டி வளர்த்தாரையும் பாழ்செய்யத் தீண்டும்பாம்பு நீயே எங்கள சத்துருவோடுகூடி மர்மங்களை யெல்லாம் வெளிப்படுத்தி, எங்களெல்லோரையும் நாசம் செய்யத் தலைப்பட்டுவிட்டாய் நீ சொல்லாமல் போனால் எனது நிகும்பலை யாக காரியம் இவர்களுக்கெப்படித் தெரியும்? நீ எங்களை வம்சநாசம் செய்து இந்த லங்கைக்கு மகுடாதிபதியாகி அரசாட்சி செய்தாலும் அதிலென்ன பெருமையடையப் போகிறாய்? பந்து வர்க்கமில்லாத ஒற்றைக் காட்டேரி போற்றனே மிரள மிரள விழிக்கும்படியான நிலையேற்படும்? அடே இனத்துரோகி! புத்திரத் துரோகி! உன் முகத்தில் விழித்தாலும தோஷம் தோஷம்

அப்பாலே விலகி ஓடிப்போ நின்றால் என் கை அஸ்திரத்துக்கு இரையாவாய்.

விபீஷ—அடேமுட்டாட்பயலே இந்திரசித்து! என்ன சொல்வினே?

பாட்டு.

இனிமேல் சகிக்கமாட்டேன் என்றமெட்டு.

இ-ம்-சாவேரி-தாளம்-சாப்பு.

பல்லவி.

நிந்தித்துப் பேசாதே இந்திர சித்துப்பயலே
நீநாற்ற வாயை மூடடா.

அநுபல்லவி.

வந்தித்துச் சொல்லியும்ரா வணன் சீதாதேவிதன்னை
வணங்கிவிடாததாலே விளைந்ததீமைக்காயென்னை (நி)

சரணம்.

சண்டாளனுன்றகப்பன் கொண்டமதத்தினலே
தர்மதேவதைமனம் பெருமைகொள்ளாததலே
கொண்ட செல்வங்களெல்லாம் குலைந்தீர்மதத்தினலே
கூற்றுவனுமுங்களைக் கூப்பிடுகிறன்மேலே. (நி)

ஓதுவதொன்று செய்வ தொன்றுமற்றிருதயம்
உத்தம மாகாதுங்கள் உடல்முற்றுவிஷமயம்
ஆதலினலேநீயா லோசித்துப்பார்நன்னயம்
அறநெறிதவறுவோர் அடைவாரோராமஜெயம். (நி)

வ-ம்— அடேமடையா! உனது தகப்பன் எனக்கு முன்னேனகப் பிறந்தாலும் சற்றுவது அறிவில்லாத மூடன், பரதார சோதர நீதியை யுணராத காமாதுரான கொடியன் என்றல் கூடிய மட்டும் அவனுக்குப் புத்திசொல்லிப் பார்த்தேன், அணுவளவாவது கேட்டானில்லை அக்கிரமக்காரருக்கு அவஸ்தை நேருவது சகசம் புண்ணியம் வெல்லுவதும், பாவந்தோற்பதும் இயல்பு - என் விருதாவாக என்னை நிந்திக்கிறாய்? இவ்வளவு அனர்த்தங்களையும் தானகவே தேடிக்கொண்ட உன் அப்பனை நிந்தித்துத் திட்டுவாய் மகாபதிவிரதையான ஜானகியம்மனின் கற்பென்னும் நெருப்பு உங்கள் வம்சநாசஞ்செய்ய வந்த கொள்ளியாயிற்று உங்களுக்கெல்லாம் எமதருமன் சௌக்கியமான

இடத்தைத்தேடி வைத்திருக்கிறான். அங்குபோய்ச் சுகித்திருங்கள் ஏன் நீ இன்னும் இங்கு தாமதிக்கிறாய்? உன் தலைக்குச் சரியான அஸ்திரம் இளைய பெருமாள் எடுத்து வைத்துக்கொண்டு உன் வரவை எதிர்பார்த்து நிற்கிறார். உனக்கெதுவேண்டினும் அவரிடம்போய்க் கேட்டுக்கொள் என்றுடை சம்பாஷித்தது போதும் போதும் இந்தமட்டோடு நிறுத்தடா மதம் பிடித்த மட்டிப்பிரஷ்டப் பயல்மகனே!

இந்திரசித்து— ஆ ஆ! அப்படியா சமாசாரம்?

பாட்டு.

நம்பிக்கைத் தேவன்துணை என்றமெட்டு.

இ-ம்-யோசனம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

விடுகிறேன் கணைகள் இன்று
வேகமாகநீங்கள் யாவருமேசாக (வி)

லட்சுமணன்— பாட்டு பல்லவி.

உன்னை விடுவதில்லை இன்று
ஓடிடநீவழி தேடி னுகானினி. (உ)

இந்— அநுபல்லவி.

கிடுகிடுவென அண்டம் நடுங்கிட
கேட்டதொனியிலை தேவரோடுங்கிட
கிட்டுவேன் கட்டுவேன் வெட்டுவேன்
கேவலம்நீரோனை யோவெல்லும்
வீரரோ நேரினிலே யிதோ (வி)

லட்— அநுபல்லவி.

முன்னை முகத்தினில் மோசம்பலசெய்து
முன்னே யொளித்தனை பிரமாஸ்திரமெய்து
மூர்க்கனே தீர்க்கமாய் நேர்க்குநேர்
[illegible] பெருநிசனை பலவெடு
சரி [illegible] வெனதெதிர் அமர்கொடு. (உ)

இந்— சரணம்.

வாது செய்யவந்த மானிடப் பூச்சி
வானரக்கூட்டமு னக்குப்படை சீச்சி

மாட்டுவேன் வாட்டுவேன் ஓட்டுவேன்
வக்கணைகற்ற சமர்த்துகள் இத்தினைத்தி மதித்திட (வி)

லட்— சரணம்.

இத்தனை நாளைப்போ லின்றுநீ எண்ணதே
என்னையகன் றோட யோசனை பண்ணதே
ஏற்றுவேன் மாற்றுவேன் தூற்றுவேன்
ஈடற்றெளியா பற்பல மோசச்செயல் போரைப்புரி (உ)

இந்— அற்பமானிடனுனக் கென்னுண்மை யுண்டு
அஸ்திரங் கொண்டுன் னுடலைத் துண்டுதுண்டு
ஆக்குவேன் தாக்குவேன் போக்குவேன்
அதிவே சமதா யிதுவே ளையிலே கணைபா யுதுபார் (வி)

லட்— விட்டகணை யெலாம் பட்டென்றொழிந்தது
வேகமென்றுயே நீ யெங்கே மொழிந்தது
வீரமோ பாரமோ சாரமோ
விடுவா யினிமேல் மொழியா டுவதே னடடா மடையா (உ)

வ-ம்— இன்னும் இவனுடன் போராட்டமா? முதலில் ஒரு பாணந்
தினலே, இவன் வலது கரத்தை யறுத்து, இவனது மனைவி
முன்னிலையில்போய் விழச்செய்து, பின்மற்ற அவயவங்களையும்
கண்டதுண்டமாக நறுக்கித்தலையைக்கொய்து ஸ்ரீராமபிரானின்
பாதாரவிந்தத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன்.

இந்திரசித்து வதமாகிருன்.

ஸீன் முடிவு.

---

## ஸீன்—9.

காலம் — காலை.
இடம் — இலங்கையில் அந்தப்புரம்
பாத்திரம்— சுலோசனை.

---

சுலோசனை முன்னே இந்திரசித்து வலதுகை வந்து விழுதல்.
(ஓடிட்போ யெடுத்துப்பார்த்து) இதென்ன?

பாட்டு.

தாயேசோல் ஞாயமா - என்ற மெட்டு.

இராகம்-முகாரி—தாளம்-ஆதி.

பல்லவி.

இங்கே வந்து விழுந்ததே எந்தனுதன் கை (இ)

அநுபல்லவி.

அங்கே அவதியாகி அவரென்னை நினைத்தாரோ
வங்கையெனக்குச் சொல்ல வாஞ்சித்தனுப்பித்தாரோ (இ)

சரணம்.

உண்மையிலிறந்தாரோ உயிரோடிருக்கின்றாரோ
கண்ணில் விழிப்பதற்குக் கருதியழைக்கின்றாரோ (இ)

சண்டைக்குப் போகக்கூடா தென்றுதடுத்தேன் பாவி
மண்டுமந்தச்சகுன மாய்த்ததோ நாதனுவி (இ)

சிரித்ததிருமுகத்தைத் திரும்பவுங் காணுவேனோ
உரித்துள்ளார் மாய்ந்தபின்பு முயிரினிப் பேணுவேனோ (இ)

வ-ம்— ஐயோ தெய்வமே! என் பிராணேசர் உண்மையிலிறந்தா போனார்? இல்லையேல் அவரது வலதுகை மாத்திரம் எனது முன்னிலையில்வந்து விழுவானேன்? ஒருக்கால் மாறுவஸ்தையி லிருப்பதால், தமது வலக்கரத்தை மாத்திரம், நம்மையழைத்து வர அனுப்பினாரோ? சண்டாளியாகிய நான் அவரைச் சண் டைக்குப் போகக்கூடாதென்று தடுத்தேன் அந்தப்பொல்லாத அவசகுனந்தான் நாயகருயிருக்கு நாசமாக முடிந்ததோ? புன் னகையோடுகூடிய அவரது வதனும்புயத்தை நான் மீண்டுமொரு முறை காணவாய்க்குமோ? நாயகன் மடிந்தபின் மாதருக்கு வாழ்வேது?

விருத்தம்.

மங்கையர்க்குக் கணவனன்றி பொருளேது வாழ்வேது
மற்றுமேது
செங்கையற்று ரணகளத்தி லவர்வீழ்ந்த நிலைகாணச்
செயலொவ்வாது
பொங்குதுற்றுக் கண்ணீரும் பொருந்தியகாவுங்குழறப்
பொருந்த லாச்சு
தங்கிநிற்ப தாகாது சென்றுடலைக் காண்பதுநற்
றகுதியாமே.

வ-ம்— நமது நாயகர் யுத்தகளத்திலே கையிழந்து வீழ்ந்துகிடக்கும் பரிதாபநிலையைக் காணுமல் இங்குபுலம்பி வீண்நேரம் போக்கு மறிவீனந்தகாது. இதேசமயத்தில் நாம் அவருடலைத்தேடிக் கண்டு சிகிச்சைசெய்து உபசரிப்பதே தகுதி.

பாட்டு.

இ-ம்-புன்னுகவராளி—தா-ம்-ரூபகம.

பல்லவி.

திருமுகங் காணவேபென்று
செய்வதொன்றுந் தாமேனன் ஐயையோ என் வினை (தி)

அநுபல்லவி.

ஒருமொழிசொல்ல உயிர்பெற்றிருப்பாரோ
உற்றபகைவ ருடலைமறைப்பாரோ (தி)

சரணம்.

மஞ்சளும் போச்சுதே மாபாவி யுண்டை
என்றபேரும் வாச்சுதே
பஞ்சணைமீது படுக்குமவர் மேனி
பாரிற் புரளவும் பார்ப்பேனே ஞானினி
கையொன்றைக் கொய்தாரோ கண்டதுண்டமா
யுடல்வதை செயதாரோ
ஐயையோ பகைவரின் அக்ரமமோவிது
ஆவியிருந்தா லதுபோதுமானது (தி)
செருக்களக் குழியிலே செத்தவீரரைப்
புதைக்குந் தொழிலிலே
உரியவர் மூடி உடலை மறைந்தாரோ
உண்மை விபரமெனக்கு முரைப்பாரோ (தி)

வ-ம்— பகைவர்கள் எனது நாயகரின் ஒருகையைத்தான் துணித்தாரோ, அல்லது உடலைக் கண்டதுண்டமாத் துணித்தாரோ? எவ்வளவு காயங்களை அவருடலடைந்தாலும், அவருயிரிருந்தால் அது ஒன்றே போதுமானது. ரணகளத்திலே செத்த வீரர்களைப் புதைக்கும் தொழில் செய்யப்பட்டவர்கள் ஆழமான குழியைத்தோண்டி நாதனுடலைப் புதைத்துவிட்டாரோ? அப்படிப் புதைத்தாராயினும், அவர்கள் இந்த இடத்திலேதான புதைத்தோமென்று எனக்குண்மையைக் கூறுவாரோ

ஒருக்கால் எதிரிகள் தாம் தேகத்தை மறைத்துவைத்திருக்கிருரோ? என் ஒரு கேள்விக்குப் பதில்மொழி சொல்ல அவர் உயிரோடிருக்கிருரோ? அவர் திருமுகத்தைத் தெரிசிக்கும் பாக்கியம் நான் கொடுத்து வைத்திருக்கிறேனே? தெய்வமே! என் கர்மமா இது?

விருத்தம்.

பட்டமிழந்தேன் பணியிழந்தேன்
　　பாவையிழந்தேன் பங்கிழந்தேன்
கட்டமிழந்தேன் கனமிழந்தேன்
　　காவலிழந்தேன சுழங்கிழந்தேன்
மட்டுவழியு மலரிழந்தேன்
　　மஞ்சமிழந்தேன் மணியிழந்தேன்
ஒட்டமிழந்தேன் கணவனெனு
　　முரிமையிழந்த பொழுதினிலே.

வ-ம்— நாதனையிழந்தபோது சகல ஐசுவரிய போகமெல்லாம் அத்தோடு ஒழிந்தனவன்றோ? இங்ஙனுமிங்கு புலம்பிககொண்டு காலம் போக்குவதில் பயனயாது? மிருகபட்சிகளால் உபத்திரவமேற்படாவண்ணம் நாயகருடலைப்போய்ப் பாக்கும்பொருட்டு மாமியாரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு ரணகளம் போவோம். (போகிருள்)

ஸீன் முடிவு.

---

## ஸீன் 10.

காலம் — காலே
இடம் — அந்தப்புரம்
பாத்-ள் — மண்டோதரி, சுலோசனை.

மண்டோதரியைக் கண்டு புலம்பல்.

மண்டோ-வ-ம்— ஏனம்மா! இப்படியழுதுகொண்டு வருகிறுய்? எக்காரியமும் பிண்டம் பிடிக்குமநாளில் பிரமதண்டம் எழுதியபடிதான் நடக்கும் நீ விசனப்படாதே!

சுலோசனே— பாட்டு தர்க்கம்.

நாளெரு பெண்பிறந்து - என்ற மெட்டு.

இ-ம்-சீலாம்புரி—தா-ம்-ஆதி.

கண்ணி.

மாமிநானென்ன செய்வேன் மணவாளன் கையென்னிடம்
வந்துவிழ லாச்சுதே யிதுபொழுதே. (மா)

மண்— அம்மா சுலோசனேநீ யழுதுவாடுவதாலே
அவதி தொலையுமோசொல் தலைவிதியே (அ)

சுலோ—என்னசொன்னபோதிலும் ஏற்காதென்னிருகாது
ஏகவிடை தருவீ ரிதுதகியே (மா)

மண்— பிணமுநிணமு ரத்தப் பெருக்குமுள்ள களத்தில்
பெண்கள் போகலாகாது தெரிவாயே (அ)

சுலோ—களத்திற்கிப் போதேபோனல் கணவனுரின்னுடலைக்
காணு நிலையில்லையே விடைதருவீர் (மா)

மண்— காணுநிலையுமுண்டு காணு நிலையுமுண்டு
கவலைப்படுவதினல் விதிவிடுமோ (அ)

சுலோ—நாதனுடலைக் கண்ணல் நானின்று காண்பதற்கு
ரணகளஞ் சென்றுவர விடைதருவீர் (மா)

மண்— பூவையே வெளியேறிப் போகுமிடமிதல்ல
போகாத இடம்போக லாகாது (அ)

சுலோ—அந்தியகாலமண வாளன் முகத்தைக்காணு
தரிவையரிருப்பது சரியிலையே (மா)

வ-ம்— மாமி! தாங்களென்ன சொன்னபோதிலும் என்மனஞ் சமாதானத்தையடையாது. நான நாயகருடலைக்காண யுத்தகளத்துக் கவசியம் போயே தீருவேன.

மண் —நீ பெண் தனிததுபபோவது தோஷமென்றே தடுத்தேன் என் வார்தையை யெள்ளளவும் கொள்ளாமல ஒரே பிடிவாதமாக அங்குபோயே தீருவேனெனகிறுய், ஆனல் உனது மாமனுரிடம் சொல்லிப்போவது நலமெனறு நினைக்கிறேன.

சுலோ—மாமி! அது நியாயந்தான். அப்படியே மாமாவிடம் சொல்லிப்போகிறேன.

மண் —சரி அப்படியே செய். (போகிறுள்)

ஸீன் முடிவு

## ஸீன்—11.

காலம் — காலை
இடம் — சபாமண்டபம்
பாத்திரங்கள் — இராவணன் முதலியோர்.

சுலோசனை இராவணனிடம் சொல்லி விடைகேட்குதல்

தம்பிமார் மூவர்களு - மென்ற மெட்டு.

இராகம்-வராளி தாளம்-திரிபுடை

பல்லவி.

மாமா நானென்னசெய்குவேன் மணவாளனில்லையாலே
மனமது புண்ணாக நோகுதே

அநுபல்லவி.

சோமசேகரனருள் தொலைந்துமின்றோடுபோச்சே
தொடர்ந்துமென்மேலும்வந்த துக்கம் விருத்தியாச்சே (மா)

சரணம்

எனக்கினிமேலேகெதி என்னவுண்டுபுவியில்
மனக்கிலேசத்தையினி மாற்றுவதெவ்வழியில் (மா)
துணையில்லாதவெனக்குச் சொல்லலாகாது தடை
கணவனை நான்போய்க்காண கருதிவிடை தருவீர் (மா)

---

வ-ம்— மாமா! என் மனச் சஞ்சலம் நாயகருடலைக் கண்டாலொழிய தீருவதற்கு வழியில்லை. ஆகையால் ரணகளம் போய்வர உத்திரவு கொடுக்கப் பிரார்த்திக்கிறேன்.

ராவணன்— பாட்டு

நீபோயுரைப்பா யனுமானே-என்றமெட்டு.

இராகம்-ஸ்ரீராகம்-தாளம்-ஆதி.

பல்லவி

நீயங்குபோகலாகாது நான்சொல்லுகின்றேன்

அநுபல்லவி

நீதியுமல்ல பெண் களுக்கோதினேனுதலால் (நீ)

பல்லவி

சுலோ-மாமா இப்படிச்சொல்லாதீர் மாற்றம் பேசாமல்

அநுபல்லவி

மற்றெனக்குத் தஞ்சமேது சற்றேனுந்தடையோதாது (மா)

ராவ— சரணம்

மாயும்வீரர்பிணங்கள் சாயும்ரணகளத்தில்
பேயும்பிசாசுங்கூடும் பேதையர்போதற்றகாதுநியங்கிலே (நீ)

சரணம்

சுலோ— நேராயவர்முகத்தைப் பாரா திருக்கமாட்டேன்
தாரீர்விடையிப்போது
சஞ்சல மிஞ்சியென் னெஞ்சமு மஞ்சுது (மா)

ராவ— காக்கைகழுகுகூடி சேர்க்கையாகச்செத்தவர்
ஆக்கையைக் கொத்திதின்னு
மங்கும டந்தையர் சென்றிட நன்றல்ல (நீ)

சுலோ— என்ன சமாதானங்கள் சொன்னபோதுமெனக்கு
நன்னயமாவதில்லை
நானிது வேளையி லேகிட வேணும்நீர் (மா)

ராவண வ-ம்--அம்மா சுலோசனு! என் வார்த்தையைமீறுதே, நீயோ இளம் பருவப்பெண் தனித்து அயலிடம் செல்வது நியாயமல்ல, மேலும் ரணகளமோ பார்ப்பதற்குக் கோரமான பயத்தைக் கொடுக்கக்கூடியது. அந்தவிடத்திலோ நமது பகைவர்கள் கூடியிருப்பார்கள். அவர்கள் தலைவனோ பெண்டிழந்த முண்டையன். அவன் தம்பியோ மாதரை மானபங்கஞ் செய்யும் மடையவண்டன். இவ்வகையுள்ள அபாயகரமான இடத்திற்கு நீபோவது தகாது இன்னும் நான் சொல்வதைக்கேள்.

சுலோ-வ-ம்-மாமா! நான் எவ்வளவு கோரங்களைக் கண்டாலும் அச்சமடையமாட்டேன். தாங்களெவ்விதம் சினங்கொண்டு சொன்னாலும் அதற்கும் பயப்படேன். என்னுதன் இறந்தபின் பூமியில் வாழ எனக்கிஷ்டமில்லை 'சாகத்துணிந்தவருக்குச் சமுத்திரம் முழங்கால் மட்டுஆழம்' என்னும் பழமொழியை உணர்ந்த நீங்கள் என்னைத் தடுப்பதற்கு நீதியல்ல என்னுயகர் விழுந்து கிடக்குமிடம் துர்நாற்றமும், பயங்கரமும் பொருந்திய ரணகளமாக விருந்தாலென்ன? அது நரகலோகமாக விருந்தாலென்ன? அந்த விடமே சல்லாவிரித்த சப்ரமஞ்சத்தோடு கூடிய சையாக்கிரகமாகும் ஆகையால்.

விருத்தம்.

கன்னயமா காதமது சொல்லெனக்கிந் நாளெனது
நாதன் தேகம்
பின்னமதாய் விழுந்திருக்கு மிடந்தேடிக் கண்டொருசொல்
பேச்சைக் கேட்டால்
என்னிடரு மகலுமன்றி வேறுநிலை யொன்றறியே
னினிநா னிங்கு
சொன்னபடி நடப்பதற்கு விடைவேண்டேன் அகலுகின்றேன்
துணிவு தானே.

ஸு-ம்.—பெரியவர்களிடம் விடைகேட்டுப் போவது ஞாயமுறையென்று உங்களிடம் வந்தேன். எனது நாயகர் திருமுகத்தைப் பார்த்தாலன்றி மற்றும் எவ்விதமான செய்கைகளினாலும், சமாதான மொழிகளாலும், இடர் நீங்காது இனி தங்களுடைய சம்மதமெனக் கவசியமில்லை. இவ்வனர்த்தங்கள் நேருவதற்கு காமாதுர நிலையுடையவனாகி அன்னியர் மனைவி அதிலும் மகா பதிவிரதையைச் சிறையெடுத்து வந்து, மோகங்கொண்ட மூடமதியுடைய உமது முன்னிலையில் நிற்பதே மிகு பாவமூட்டையைக் கட்டிக்கொள்ள ஏதுவாகும், ஆகையினாலே இதே கணத்தில் எனது கணவருடலைத் தேடி மனத்துணிவோடு யுத்தகளத்துக்குப்போகிறேன். (போகிறாள்.)

ஸீன் முடிவு.

---

## ஸீன் 12.

காலம் — முற்பகல்.
இடம் — போர்க்களம்.
பாத்-ள் — சுலோசனை.

சுலோசனை ரணகளத்தில் தன் புருஷன் தேகத்தைத்தேடுகிறாள்.

பாட்டு

இனிமேல் சகிக்கமாட்டேன் - என்ற மெட்டு.

இ-ம்—சாவேரி—தா-ம்—சாப்பு.

பல்லவி

இந்தரணகளத்தி லென்றனதருடலை
எங்கென்று தேடிக்காணுவேன்

அநுபல்லவி

எங்கெங்குநாய்நரிகள் இரையாகச் சவந்தின்று
இணைந்துகூத்தாடுகின்ற இடத்திற்றனியாய்நின்று (இ)

சரணம்.

கோடிகோடித்தலைகள் குவிந்துகிடக்கின்றன
கொத்திக்கழுகு காக்கை தசைகள்புசிக்கின்றன
பாடிவேதாளப்பேய்கள் பூதம்நடிக்கின்றன
பார்க்கப்பார்க்கவென்னெஞ்சம் பதறித்துடிக்கின்றன (இ)

ப-ம்.—ஐயோ! எனக்கு வாய்க்கவேண்டுமோ? எனது நாயகருடலை இங்கு எப்படிக் காணக்கூடும்? கோடி கோடியான படைவீரர்கள் மடிந்து மலைபோல் குவிந்து கிடக்கிறார்களே, நம் கணவருடல் இதுதானென்று எப்படியறிவது? நாய் நரிகள் இறந்தவர்களுடைய தசையைப் பிடுங்கித்தின்று உலவுகின்றன பேய் பசாசு பூதங்களுங்கெக்கலி கொட்டி நடமாடித் திரிகின்றன. காக்கை கழுகுகளும் பிணங்களைக் கொத்திக் கொத்தித் தின்று வட்டமிட்டுச் சுழல்கின்றன. நானுத்தமமான பதிவிரதையானால், என்னுயகர் அங்க உறுப்புவகைகளில் ஒன்றுவது என் கண்ணுக்குத்தென்படாது போகுமா? இது ஏது வில்லைப் பிடித்தபடியே ஒரு கை யிற்றுக்கிடக்கிறது,

பாட்டு.

இந்தவனப்பெருமை - என்றமெட்டு.

இ-ம்காம்போதி — தா-ம்ஆதி.

பல்லவி.

இதுதானெனதுநாத னிடது கரம்
எடுத்தவில்லொடுவிழ எய்தார் சரம் (இ)

அநுபல்லவி.

மதிதவறுதிப்போது மனதினிலைகொள்ளாது
விதியின்செயலாமோ இதுவேதையாகுது (இ)

சரணம்

அத்திரங்களெய்தாரோ- அவயவங்கள்கொய்தாரோ
சித்திரவதைசெய்தாரோ சேரினமெய்தினரோ (இ)
உடலுருவின்றிப்போச்சோ உயிருமகன்றுபோச்சோ
இடரெனக்குநேரலாச்சோ எக்கதியாச்சோ (இ)

வ-ம்.—ஆ! பிராணேசா! திக்குவிஜயம் புரிந்ததிரா? உமக்கும் இக்கெதியுண்டாகுமா? பகைவர்கள் உறுப்புறுப்பாய்க்கொய்து சித்திரவதை செய்திருக்கிறார்களே. இது என்ன அநியாயம்? எதிரிட்டபகைவர் ஒருவருயிரை மற்றொருவர் போக்குவது முறைமையே, ஆனாலும் இப்படிச் சித்திரவதைசெய்யவும், மநுமுறைபோதிநதிருக்கின்றதோ நல்லது இடதுகை யிங்கிற்றுக்கிடப்பதினாலே சமீபத்திற்றான் உடலும் விழுந்திருக்கவேணும் பக்கங்களிற் பார்ப்போம். (உற்றுப்பார்த்துவருதல்)

பாட்டு

ஆற்றுவாரில்லை - என்றமெட்டு.

இ-ம்-பைரவி—தா-ம்-ரூபகம்.

பல்லவி.

கண்டேனிங்கு நாதருடல்
காதகிநானென்ன செய்தவேன் (க)

அநுபல்லவி.

துண்டமாய்விழத் தலைதுணித்தாரோ
துன்பத்திற்கேது செய்குவேன்

சரணம்.

அண்டருக்கிறை யோடுமீளவும்
அமர்புரிந்திடச் சென்றீரோ
கண்டரம்பையர் மீதுமோகமாய்க்
காதலித்தங்கு நின்றீரோ (க)

தேவரீர் தந்தை காமஆசைக்குச்
செய்தீரோ தான மாவியை
ஆவல்கொண்டநா ளேந்தழவொன்றி
யாகத்தைவிட்டீர் பாவியை (க)

உடலைநீங்கிய சிரசெங்கேகாணேன்
ஒளித்தென்னைச்சோதிக் கின்றீரோ
இடமெங்கேநீர் போனாலும்நான்வர
இசையேனென்றெண்ணி நின்றீரோ (க)

வ-ம்.—பிராணேசா! என்னை யொருநாளுங்கைவிடமாட்டேனென்று நாம் சந்தித்தபோது அன்பு இத்தன்மையுடையதென்று விஸ்தரித்தீரே. அதனைமறந்தீரோ! முன்முறைவென்றது போதா

தெனமீண்டும் அமராபதியிற்போய் இந்திரனோடு சண்டை போடுகின்றீரோ? அல்லது அங்குள்ள ரம்பாஸ்திரீகள் மீது காதலுற்றுக்கூடி யின்பமனுபவித்துக் கொண்டிருக்கிறீரோ? இது நியாயமாகாதே நீர் போகுமிடமெல்லாம் என்னையுங் கூட்டிக்கொண்டு போவதல்லவோ தர்மமார்க்கம். உமது தந்தையினது காம ஆசைக்கு உமதுயிரை தத்தம் செய்தீரோ? ஐயோ! உமது சிரசைக் காணேமே, மறைத்துவைத்து எனக்குக் காட்டாமல், என்மனதைப் பரீசோதித்து விளையாடுகிறீரோ? ஒன்றுந் தோன்றவில்லையே, அம்சதூளிகாமஞ்சத்தில் சயனித்திருக்கும் நீரிரதம், நிணம் மூளைகள் நிறைந்த சேற்றுக் குழியிலும் கீழ்ப்பட்ட இந்த ரணகளத்தில் எப்படிச் சயனிக்க எத்தனித்தீர்? எல்லாமெனக்குத் தெரியும் தெரியும், இதோ பாரும் நீரிருக்குமிடத்துக்கு வந்துசேருகிறேன். ஆ! ஆ! (மூர்ச்சையாகி விழுந்தெழுந்து) இனி என்ன செய்வது? சிரசைக்காணேமே? ஒரு வேளை பகைவர்கள்கொண்டு போயிருக்கக் கூடுமே? ஸ்ரீராமச்சந்திரராகிய வில்வீரர் கருணைமூர்த்தியென்று கேள்விப்பட்டிருக்கிறோம், பகைவரால் கொண்டுபோகப்பட்டிருந்தால் நாம் அவரிடம் யாசித்தால் தடையில்லாமல் கொடுப்பார். நல்லது வேறுமார்க்கம் கிடையாது அதோ வானரக் கூட்டமொன்று காணுகிறது, அவைகள்தான் ராமபிரானின் சைன்யங்களாக இருக்கக்கூடும் அங்குபோய் விசாரித்தறிவோம்

சுக்ரீ—அங்கதா! அதோவருகிற மாதரசியைப்பார்த்தாயா? ராவணன் இந்தஎட்டுநாள் யுத்தத்திலும் வெற்றி கிடைக்கவில்லை. புத்திரமித்திர களத்திராதியோர் எல்லோரும் நாசமாகப்போனார்கள், இனி நாமும் இறக்கும்படியாக நேரிடும். ஆதலால் இப்பொழுதே சிறையை நீக்கிவிட்டால் ஜானகிராமனிடம் போய்ச்சேருவாள், அவர் வேண்டுவது மனைவியே. அவள் வந்து சேர்ந்ததும் சண்டையை நிறுத்தி எல்லோரையும் அழைத்துக்கொண்டுபோய் விடுவார். தான் சவுக்கியமாக வாழலாமென்று சீதாதேவியை விடுவிட்டான் என்பதாக நினைக்கிறேன் வருகிற மாதுசிரோமணி ஜானகி அம்மனே! ஜானகியம்மனே.

(வானரங்கள் சந்தோஷித்தல்) ஆ! ஆ! ஆ!

பாட்டு.

மாஞ்குச்சரியாம் என்றமெட்டு.

பல்லவி.

ஆஞ்சநேயரே ஆஞ்சநேயரே
அதோ ஒருபெண் வருகிறாள்நம்நேரே. (ஆ)

அநுபல்லவி.

பாஞ்சுசஞ்சீவி படர்வதற்குரிய
பலத்தமலையைக்கொண்டு களத்திலுதவிய (ஆ)

சரணம்.

கொடியபொல்லாராட்சச குலத்தினள் எல்லை
கும்புகளுடையவும் இவளொரு எல்லை
இடர்கொண்டவள்போல்காண்கிறாள்நேர்ந்த தொல்லை
ஏதுவோ இன்னதென்று தெரியவு மில்லை (ஆ)

வ-ம்—ஆஞ்சநேயரே! குணக்குறிகளினாலே உத்தமிபோற்காணப் படும அந்த ஸ்திரீயானவள் நம்மைநோக்கிப் பக்கத்துணையில் லாமல் தனியாக வருகிறாள். அவள் யாராகவிருக்கலாம். எதற் காக நம்மை நோக்கி வருகிறாள்?

அநுமார்—கொஞ்சம் பொறுங்கள் சமீபத்தில் வந்துவிட்டாள் கவ னிப்போம்.

பாட்டு.

வந்தரூபசுந்தராகீ - என்றமெட்டு.

இ-ம் தர்ப்பார்-ஏகதாளம்.

கண்ணி

லட்சு— யார்பெற்றதன்பேருயாது சேதியென்னநீயே
இந்தவிடமொன்றியாக வந்ததேன்சொல்வாயே

வ-ம்—பெண்ணே! நீயார்? உன்பேரென்ன? எதற்குத்தனித்து இந்த விடத்திற்கு வந்தாய்?

லோ-பா—சொல்லுவார்களென்பெயர் சுலோசனையென்றையா
சொந்தநாதனுரைக்காண இங்குவந்தேனையா

வ-ம்—என்பெயர் சுலோசனைஎனதுநாயகரைக்காண இங்குவந்தேன்

லட்சு- நாதனுரைத்தேடியிங்கு நாடினேனென்றாயே
நல்லதல்லஆயினுமுன் நாதனார்சொல்வாயே.

வ-ம்—எவ்விதமுகாந்திர மிருப்பினும் பெண்கள் தனிவழி வருவது நீதியல்ல, ஆயினும் நாயகனைத் தேடிவந்தேனென்று சொல்லுகிறாய்? இருக்கட்டும் உனது நாயகன் யார்?

சுலோ-பா— அண்டர்நாதனைவென்றிட்ட ஆண்மைமிக்கவீரர்
அவரெனதுபிராணநாதர் அயனுக்கைந்தாம்பேரர்.

வ-ம்—தெய்வேந்திரனைச் சிறைசெய்தவரும். பிரமதேவனுக்கு ஐந்தாம் பேரருமாவர், எனது பிராணநாதர்.

லட்சு-பா— தெரிந்துகொண்டேனிந்திரசித்தன் தேவிநானீயென்று
செத்தொழிந்தான் அவனைவந்துதேடலேனோஇன்று

வ-ம்— நீ சொல்லிய குறிப்புப் பொருளால் இந்திரசித்தன் மனைவி என்பதாகத் தெரிந்துகொண்டேன் அவன் செத்தொழிந்து போய்விட்டானே. அவனைத்தேடுவதிலேது பிரயோசனம்?

சுலோ-பா— திருமுகத்தைப் பார்ப்பதற்குத் தேடிவந்தேனையா
சிரசைக்காணே னதனைக்காணத் தெரிவிப்பீர் நீரையா

வ-ம்— இறந்த நாதர் திருமுகத்தைப் பார்க்க இங்கு தேடி வந்தேன், கைகளையும், உடலையும் கண்டேன் சிரசைமாத்திரங் காணவில்லை தாங்கள் தயவுசெய்து, அந்தச் சிரம்விழுந்து கிடக்கும் இடத்தைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

லட்சு-பா—

வேறு.

எழுந்திரடி ஏதுஏற்கா - என்றமெட்டு

இ-ம்-தர்பார்-அடதாளம்.

பல்லவி.

தலையைக் கொண்டு போக இங்கே வந்தாயோடி

அநுபல்லவி.

கலைகற்ற மாய மொன்றும் நடவாது உன்றன்
கணவன்சிர சுனக்குக் கிடையாது
கொலைகாரப் பயல்தேவி குடிகேடி பழிகாரி
கொடுக் கேன் கொடுக்கேன் கொடுக்கேன் எட்டிநட்டி (த)

சரணம்.

வஞ்சக நிலையெல்லா மறிவேண்டி உன்
மாறான வகையெல்லாந் தெரிவேண்டி
நஞ்சனையநீவந்து நாடியிங்கிருக்கிறாய்
நடடி நடடிநடடி எதிர் நிற்காமல். (த)

வ-ம்— அடி! யாரை ஏமாற்ற வந்தாய். மகாசூனிய மாரண மந்திரக் காரனான இந்திர சித்தன் மனைவி நீயும் பொல்லாத வஞ்சக்காரி என்பதையறிவேன் அவன் நிகும்பலை வேள்விசெய்து இறந்த மற்றோரையும் எழுப்பப் பார்த்தான் நீ அவன் தலையைக் கொண்டு போய் துண்டுபட்டுக்கிடக்கும் அவனுடலில் ஒட்டி ஏதோ ஒரு மந்திர பலத்தால் அவனை எழுப்புவதற்கு எண்ணங்கொண் டிருக்கிறாய். உன் மாயவித்தையும் பசப்புமொழியும் இங்கே செல்லாது சிக்கிரம் இந்த இடத்தைவிட்டு அகன்றுபோய்விடு.

சுலோச— விருத்தம்.

வஞ்சக நினைத்து வர வில்லை அய்யா
மணவா ளன்றிரு முகங் காண
நெஞ்சினி லாவ லுதித் திங்கு வந்தே
னேரிது வேளை யென் மீது
கொஞ்சமு மச்சங் கொண்டிடா திரங்கிக்
கோ பத்தை மாற்றி யிவ் வேளை
சஞ்சல நீங்க அருமை யென் கணவன்
தலை யைத்தந் தனுப்பிடு வீரே.

வ-ம்— ஐயா! நான் வஞ்சக நினைவோடு வந்தவளல்லள் இறந்த நாதனது திருமுகங்காண இச்சையுண்டாயிற்று தாங்கள் சற்றேனும் சந்தேகங்கொள்ளவேண்டாம், நானோ அனாதாவான சிறு பெண் என்மீது கருணை நோக்கம் வைத்துத் தங்கள் கோபத்தை மாற்றி, என தாசைக்கணவன் சிரசைக் கொடுத்தருளப் பிரார்த்திக்கிறேன் தயவுசெய்யுங்கள்.

ஸ்ரீராமர், லட்சுமணர், சுலோசனை

மூவர் பாட்டு தர்க்கம்.

பாட்டு.

அம்மணியே யிந்த ஆரண்யம் — என்றமெட்டு.

இ-ம்-தேசிக தோடி-தா-ம்-ரூபகம்.

கண்ணி.

ராமர்- தம்பி யிவளார் தனிமையாய் வந்து
தவித் தழுங் கார ணம் யாது
லட்சு- இவள்தா னிந்திர சித்தன் தேவியாம் அன்னோன்
தலையைக் கேட்கின்றா ளிப்போது

வ-ம்- அண்ணு! இவள்கபடவஞ்சகனுகிய இந்திரசித்தனுடைய தேவி யாம் நான் கொய்துகொண்டு வந்த அத்துஷ்டன் சிரசைத் தன் னிடங் கொடுக்கும்படி கேட்கிருள்.

சுலோச- தாளினை போற்றி யென்னுயகன் சென்னியைத்
தந்தருள வேண்டு மின்று

ராமர்- தம்பியதனைக் கொடுத்துவிடுவாய்த்
தடையேனு செய்கிருய்இன்று

வ-ம்- லட்சுமணு! அந்தத்தலை நமக்கு எதுக்கு அவளிடங்கொடுத்து விடு.

அனுமா- மாய்ந்தவனையத்தலை கொண்டெழுப்பிட
வந்தாளிவள் மாயக்காரி

லட்சும- மர்மமறிந்துங் கொடுக்கலாமோ இவள்
மாரண சூனியக்காரி

வ-ம்— அண்ணு! அறுபட்டதலையை உடலிலொட்டி, அவனை உயிர் பெற்றெழச் செய்வதற்காக இவள் கேட்கிருள் ராட்சசகுலத்து ஸ்திரீகளும் மாயையில் வல்லவரென்பதாக தாடகை சூர்ப்பன கை, அயோமுகி முதலானவர்களாலே நாமுன்னமே உணர்ந்தி ருக்கிறேமல்லவா? அப்படியிருக்க இப்போது இவளிடமெப் படி அந்தத்தலையைக் கொடுக்கலாம்? தாங்களிதுவிஷயத்தில் என்னை மன்னித்து சும்மா இருங்களண்ணு!

சுலோ-பா— சந்தேகம் வேண்டாம் சககமனத்துக்குத்
தான் கேட்டேன் தாருமிப்போது

ராமர்-பா— சத்துருபத்தினியாயினு மீவாய்
தருமம் தவறலாகாது

வ-ம்— இவள் நமது சத்துருபத்தினியாகவிருந்தும் நம்மை நம்பி வந்து யாசித்துவிட்டாள். என்னவாயினும் சரி கேட்டவர்களுக் கில்லையென்னுமல் உயிரையேனுங் கொடுக்கத் தரும சாஸ்திரம் போதிக்கின்றது. இந்த முறையை நாம் தவறிநடக்கக்கூடாது. இவளும் சககமனஞ் செய்வதற்குக் கேட்கிருள் அதுவுந் தர்ம நெறிதான்பாதகமில்லை சும்மா இவளிடம் தலையைக்கொடுத்துவிடு

லட்சு-பா— தர்ம நெறியல்ல தந்திரமீது
தலையைக் கொடுக்கலாகாது

சுலோ-பா— சத்தியம் வேண்டுமானாலும் செய்துதாரேன்
சந்தேகம் வேண்டா மென்மீது

வ-ம்— ஐயா! கொஞ்சமேனுஞ் சந்தேகங் கொள்ளவேண்டாம். என் பதியோடு, அக்கினிப்பிரவேசமாவதற்கே அவருடைய தலையை யாசிக்கிறேனேயன்றிச் சிரசை வாங்கிப்போய் உங்களுக்கு அனர்த்தம் விளைவிக்குமாறுபாடுசெய்வதற்கில்லை வேண்டுமானால் நீங்கள் எவ்விதமான பிரமாணஞ்செய்து கொடுக்கச் சொல்லுகிறீர்களோ? அவ்விதமான பிரமாணஞ்செய்து கொடுக்கிறேன்.

ராமர்-பா— பதிவிரதையிவள் நாதன் தலைகொடு
பாதகம் யாதொன்றுமில்லை

அனும-பா— பார்த்தாற் பசுப்போலே பாய்வாள் புலிபோல்
பாரில்விளையுமே தொல்லை.

வ-ம்—சுவாமி! பார்த்தால் பசுப்போல சாதுவாகக் காணப்படுகிறாள் என்று கொடுக்கச்சொல்லுகிறீர்கள்? பின்பிவள் பாய்ந்தால் புலி போலக் காணப்படுவாள் நன்றாகக்கவனியுங்கள். அப்பாலே மிகுந்த கெடுதியுண்டாகும் சற்றேனும் இவள் மொழிக்குடன்படுவது நியாயமில்லை சுவாமி!

ராமர்-பா- பூரணமாகக்கொடு வென்றவென்சொல்லைப்
போக்கிநிற்பதும் நன்றோ

லட் சு-பா- பொய்மானென்றே னன்றுகேளாததாலே
பொருந்திய தித்துன்பமன்றோ

வ-ம்—அண்ணா! அன்று தண்டகாரண்யத்தில் இதுபொய்மானென்று சொன்ன என் வார்த்தையைத்தாங்கள் ஆராய்ந்துப்பாராததினாலன்றோ, இவ்வளவனர்த்தங்களும் விளையலாயின தாங்களொன்று சொன்னாலதை மறுக்க நான் அருகனோ? எனக்குத் தோன்றியவரை நான் சொல்லாதிருப்பதும் பாதகமல்லவோ. அதுதான் இது கொடுப்பது சரியில்லையென்று திருச்செவிகேட்கச்சொல்லுகிறேன்.

பாட்டு.

நகுமோமுகனலே - என்றமெட்டு

இ-ம்காப்பி — தா-ம்—ஆதி.

சுலோ— பல்லவி.

தருவீரெனதெழில் நாயகர் தலைநீரிது வேளையிலே நான்
சககமனஞ் செய்பவே

அநுபல்லவி.

கருமா மணியுருவா கிய கருணு காமாதவரே
கதிவேறிலையே அதனு லருளுடனோநான்
சககமனஞ் செய்யவே (கரு)

சரணம்.

மடமா தர்கள்பதியோ டுயிர் விடசே ருதல் கடனெனவே
மறையா கமமுதலா கிய மனுநீதிகள் புகல்வனவே
உடலா னதுதலையே யிலை யெனில்நா னுறு சிதைநலமா
உதவா விடிலோ பழியான துபெறுவீர் நான்
சககமனஞ்செய்யவே (கரு)

வ-ம்-நீலமேக சாமள உருவமுடைய கருணுகா மகாத்மாவே! தாமதியாததென்ன இருக்கிறது? ஸ்திரீகள் புருஷனிறந்தால் அவர் சிரத்தோடு, அக்கினிப்பிரவேசமாகாமல் உயிர்வாழ்வது பாப காரியமென்று நீதிசாஸ்திரம் யாவும் போதிக்கின்றனவன்றோ? அதன்படியே நான் என் கணவனுடைய தேகத்தையெடுத்துப்போய்ச்சிதையடுக்கி, நெருப்பிட்டுக்கொளுத்தி, அந்த அக்கினியிலேநானும் விழுந்திறந்து, அவராத்மாவோடுசுவர்க்க பதவிபெற வேண்டுமென்ற விருப்பத்தோடு ரணகள முழுவதும் வந்துதேடினேன். சிரசு நீங்கலாக மற்ற உறுப்புக்களெல்லாம் அங்கங்கு சிதறுண்டு கிடந்தன. அவைகளையெல்லாம் பொறுக்கி, ஒருங்குகூட்டிவைத்தேன் எண்சாணுடம்பிற்குச் சிரசே பிரதானம் ஆகையால் தலையை நீங்கலாக மற்றும் உடலுறுப்புகளோடு நான் அக்கினிப்பிரவேசமாவது பயனைத் தாராதே அதற்காகவே தங்களை வேண்டுகிறேன். கிருபை செய்யவேண்டும்! கிருபை செய்யவேண்டும்!

விருத்தம்.

மாயம்மீ செய்யவல்ல மந்திரக்காரி மேலும்
ஆயராக்கதர் குலத்தினரிவைபித் தலையைக்கொண்டு
போயெதும் சூழ்ச்சிசெய்து பொருந்துதல் செய்வாயென்றென்
நேயர்களுரைப்பதாலே நிகழ்த்துண்மை வாக்கினாலே

வ-ம் ஏ! இளம்பெண்ணே! நீ ராட்சசகுலவர்த்தினுடைய தொடர்ச்சியுள்ளமாதாக விருப்பதால் இந்தத் தலையின் மூலமாக அநேக விபத்துக்களை யுண்டாக்குவாயெனறு நினைத்து, என்னைச்

சேர்ந்த மித்திரரெல்லோரும் உனக்கிவது தகாதென்று தடுக்கிறார்கள். நீ அவ்வித வஞ்சகமார்க்கங்கள் யாதொன்றுஞ் செய்யவில்லையென்று வாக்காலே பிரமாணமொழி சொல்லவேண்டும்.

விருத்தம்.

சித்தச ரூபநாதன் சிரசொன்றே காணவேண்டி
இத்தினம் வந்தேனையா இதிலொரு தோஷமில்லை
எத்துகள் மாய ஜாலம் யாதியற்றுகிலேனென்று
சத்தியமாகச் சொன்னேன் தடையில்லை நம்புவீரே.

வ-ம்—பிரபு! நான் சககமனத்துக்கன்றி, எனது நாயகர் சிரசுமூல்மாக ஏதொரு அனர்த்தங்களை விளைவிக்கமாட்டேன். இது சத்தியம்! சத்தியம்! முக்காலுஞ்சத்தியம் உண்மையாக நம்புங்கள்.

இராமர்— பாட்டு.

நாளிது வல்லா லினியேந்த-என்ற மெட்டு.

இம்-ஆரபி. தா-ம்-ஆதி.

பல்லவி.

தடையினிமேற் சொல்வது சரியல்ல விவள்பதி
தலையை யெடுத்துக் கொடுப்பாய் அருமைத்தம்பி (த)

அநுபல்லவி.

படைவீரன் மனைவியிவள் பதிவிரதை யாதலாலே
பர்த்தாவின் சிரசைக்காண விச்சைகொண்ட வெண்ணம்போலே (த)

சரணம்.

வாக்குத்தத்தஞ் செய்தாள் மாறிடமாட்டாள்
மலைதலைமேல் விழினும் நிலை கெடமாட்டாள்
நோக்கத்தை வேறொன்றினில் செலுத்திட மாட்டாள்
நுட்பமதி யுடையாள் பொய்பேச மாட்டாள். (த)

வ-ம்— என் ஆபத் பாந்தவா! இவளொரு யுத்தவீரன் மனைவி பர்த்தாவி னுடலோடு அக்கினிப்பிரவேச மாவதற்கு முன் வந்து நிற்கும் பதிவிரதை ஆகையினாலே பொய்பேசமாட்டாள் நமக்கிவ்வேளை சத்தியஞ்செய்து கொடுத்துவிட்டாள் இனிமேற் றடை மொழிவது கூடாது. இவள் நாயகன் தலையையெடுத்து இவள் கையில் கொடுத்துவிடு.

லட்சுமணன்— பாட்டு.

தாஜ ராஜ தாஜ ராஜ கெம்பீரன்-என்ற மெட்டு.

இ-ம்- தோடி- தா-ம்-ரூபகம்.

கண்ணி.

அங்கத னெடுத் தெறிந்தான் களத்தின் அற்புதம்
ஆயிரங் கோடியிலொன்று மந்தத்தலை அறிவதெவ்விதம்
அலகைகள் பலபல தசைதம தூணவென நரி யொரு மிகஉசிதம்
ஆகு மெனப்பசி வேளையிலெப்படி நாடுவதத்தலை காணும் விதம்

வ-ம்- அண்ணு! தங்களது சட்டளைப்படி இந்திரசித்தன் தலையைத் தங்கள் பாதார விந்தத்தில் சேர்த்ததின் பின்னர் அங்கதன் அதனை யெடுத்துத் தெற்குநோக்கி யெறிந்துவிட்டான் இந்த ரண களத்திலோ கோடிகோடி யெண்ணிக் கையில் அடங்காத சிரசுகள் நாலா பக்கங்களிலும் குவிந்தும் சிதறுண்டுங் கிடக்கின்றன. இவ்வளவு தலைகளில் இந்திரசித்தன் தலை இதுதானென்று அறிவதெவ்விதம்?

ராமர்— பாட்டு

கடுக்கன் மோதிரம்-என்ற மெட்டு.

கண்ணி.

நீ கேட்டுக் கொண்டாய் கிட்டுவதா லேது லாபம் நடீ
கெஞ்சினும் உன்னு கன் தலை விஞ்சியே கிடையாது
கெதி வேறொருவ ரறியாய் பதியோடே தீபுகரீ.(கே)

வ-ம்- பெண்ணே! சமாசாரமுழுவதுங் கேட்டுக்கொண்டாயல்லவா? இனியென்ன செய்வது? விஸ்தாரமான யுத்தகளத்தில், ஏராளமான தலைகளில், உனது நாயகன் தலை இதுவென அறிய முடியாததோடு இன்னொரு பின்னமுமிருக்கிறது அதாவது:— பேய்பசாசுகளும், நாய் நரிகளும், காக்கை கழுகுகளும், இங்கே யிறந்துகிடக்கும் பிணங்களைச் சின்னபின்னமாக இழுத்தும், கிழித்தும், கடித்தும், கொத்தியும், புசித்துக்கொண்டிருக்கின்றன. அதோ பல தலைகளின் நிலைகளைப்பார் கண்விழியைக் காணுததாகவும், பற்கள்மாத்திரந் தோன்ற, தசைகள் என்பது அணுவளவுமில்லாமல் மண்டை யோட்டோடு கூடியதாகவும், மூக்குகளில்லாததாகவும், காதுகளில்லாததாகவும், அலங்கோலமாகக் கிடக்கின்றன. உன்கணவன் சிரசும் ஏனிவ்வித நிலையை

அடைந்திருக்கக்கூடாது? அடைந்திருப்பின் நிச்சயமாக உன் புருஷன் தலையென்று உன்னாலு மறியக் கூடாதல்லவா? ஆகையால் நீ விரும்பிய பொருள்கிடைப்பதற் கேதுவில்லை. சககமனமாகிய அக்கினிப் பிரவேசத்திற்குத் தலையின்றிப் பயனில்லை யென்று சொல்லுகிறாய். அது வாஸ்தவந்தான் ஆயினும் வேத சாஸ்திரங்களில் எவ்வித அனுசிதங்களுக்கும் பிரகார மார்க்கங்கள் சொல்லப்பட்டிருக்கும் பரிகாரமில்லாத பாவங்கள் கிடையாது. ஆகையால் நீ வேத வித்துக்களையடுத்து நாயகன் தலையில்லாமல் அக்கினிப்பிரவேசமானாலும் பயன்கொடுக்கவல்ல எக்ஞ சாந்தி சடங்குகளைச் செய்து சககமன மார்க்கம் புரிவாயாக.

சுலோசனை— விருத்தம்.

உங்களுக் கிதில் வருத்த மொருசிறி தேனும் வந்து
தங்கிடா தெனது நாதர் தலைதனை எறிந்து நின்ற
எங்குநீ ரிடத்தைச் சொல்லும் யானிங்கு நின்றழைத்தால்
சங்கையில்லா மலந்தத் தலையது பேசுங் காண்பீர்.

வ-ம்—தயாசிந்துவே! தங்களுக்கிந்த விஷயத்தில் சிரமம் வேண்டுவதில்லை. எந்த இடத்தில் நின்று அந்த சிரசு எறியப்பட்டதோ? அந்த இடத்தைச்சொல்லுங்கள்? அந்த இடத்தில் நின்று நான் அழைப்பேனானால், அந்தத்தலையென் முன்பு வந்து நான் கேட்குங்கேள்விகளுக்குப் பதில் மொழிசொல்லும் இதுஉண்மை எங்கே எறிந்துநின்ற இடத்தைச் சொல்லுங்கள்

இராமர் பாட்டு.

வாடா சமயமீதடா மதனா - என்றமெட்டு

இ-ம்—கமாசு தா-ம்—ரூபகம்.

பல்லவி.

ஆனால்தடை செய்யவேண்டாமங்கதா
அந்தஇடத்தைச்சொல்லு

அநுபல்லவி.

தானுஇவளழைக்கு மொழிகேட்டுத்
தலைவருமெனமொழி தந்தாள்
உலைமெழுகென மனநொந்தாள் (ஆ)

சரணம்.

கூப்பிடவந்திடுமாம் கேட்கமொழிந்திடுமாம்
குண்முட்ணிதுதகி கூறுமாறு நேரிலறிவோம் (ஆ)

வ-ம்.—அங்கதா! இவள் கூப்பிட்டால் அந்தச்சிரசு எதிரில் வருமாம் கேட்டால் பதிலுரைக்குமாம், இது விந்தை நாம் நேரில் காணவேணும் நீ அந்தத்தலையை எந்த இடத்தினின்று எறிந்தாய்?

அங்கதன்—பிரபு! இந்த இடத்திலே நின்று இந்தத் தெற்குத்திசையை நோக்கி என்வலிகொண்டமட்டும் வீசியெறிந்தேன்.

ராமர்—ஏ மாதரசி! தலைதாங்கி நின்று எறிந்தவிடம் இதுதானாம் எங்கேநீ சொல்லியபடி உன்னாயகன் தலையை யிங்கேவரும்படி கூப்பிடு பார்க்கலாம்.

சுலோசனை— பாட்டு.

நில்லும் நில்லும் நாதா - என்றமெட்டு
இ-ம்—அமிர்கல்யாணி—தா-ம்—ஆதி.

பல்லவி

வாரும் வாரும் மதனராஜதுரையே யெனதுநேரில் (வா)

அநுபல்லவி

நாரும் பூவுமொன்றுபோலே
நாமிருந்தோமே முன்னாலே
ஆருங்காண அன்பினாலே
யானழைத்தே னதனாலே (வா)

சரணம்.

வெற்றிவில்விஜயதீரா விண் வேந்தனஞ்சுமதிகாரா
உற்றபோரில் ரணசூரா ஒய்யாராவீரகெம்பீரா (வா)

நாகலோகசவிஸ்தாரா லங்கை ராவணேஸ்வரன்குமாரா
மேகநாதனென்னும்பேரா விவேகமிகையினுதாரா (வா).

(தலைவருதல்)

தோந்திசரிய என்ற - திருப்புகழ் மெட்டு.
இ-ம்—ஆனந்தபைரவி தா-ம்-ஆதி

வெல்லவலியுமில்லையோ இருமனிதர்
கொல்ல மடியுமில்லையோ உமதுவிதி
விள்ளவொரு சொல்மலையோ மவுனமுறு—விதமேனோ

தோற

முத்தார மார்பா முளரியோன் பேராவென்
பர்த்தாவே வீர பராக்ரமனே நத்தாத

பேருக் கெமனே பிரபலனே மேலான
போருக் கதிதீர பொற்பனே நேருக்கு
நேரான நண்பருக்கு நித்தமுதவிசெய்யும்
சீராள னேரூப சித்திரனே காரான
தன் றுதித்த நாளுன் அழுங்குரல்கேட் டேயுதிர
நின்றஒரு பேர்பெற்ற நேயனே இன்றுகளம்

பாட்டு.

வந்தமடிய விதியோ உமதுதலை
துண்டுபடுதல் மதியோ அயலிறைகள்
வஞ்சநிலைகொள் சதியோ இதன்விபர மறியேனே

தோரு

தத்தைப் புரவி தனிக்கரும்பு வில்லிலாச்
சித்தசனே கெம்பீர சேகரனே அத்தத்தில்
நாகக் கணையும் நான்முகனு ரஸ்திரமும்
மோகக் கணையுங்கொள் முற்றவனே போகத்தில்
மிக்கவனு மிந்திரனை வென்றவத னல்நிலைத்த
தக்கதொரு நாமங்கொள் தாஷ்டிகனே முக்கியமாம்
வீரப்ர தாபனே வில்வேத நூல்வலனே
சாரப்புநித சகாயனே நேரிலபோர்

வ-ம்—பிராணேசா! அண்டாண்ட புவனங்களையும் வென்று அங்குள்ளார் அரண்டு நடுங்கி அஞ்சியோடச்செய்து திக்குவிஜயஞ்செய்து ஜெயக்கொடிநாட்டிய உம்மைச்சிறுமனிதரோ கொன்றார்கள்? மூச்சுக்காற்றுக் காற்றாத மனிதருக்கும், குரங்குகளுக்கும், நீர் தோற்றீரென்றால் உமதுபகைவராகிய இந்திராதி தேவர்கள் நகைக்கமாட்டார்களா? அன்பிற்குகந்தமணாளா! ஆசைநேசதுரையே! அயன கொடுத்த பிரமாஸ்திரமும், அதிவிஷங்கக்கும் நாகக்கணையும் மூன்றுலோகங்களையும் மயக்கச்செய்விக்கும் மோகக்கணையும் உமக்கு வெற்றியைத் தராமற்போன விதமென்ன? உம்மைப்பிரிந்து நானுயிர் வாழ்வேனோ? ஏன் எனனிடம் வார்த்தையாடாமல் மௌனமாக இருக்கிறீர்?

பாட்டு.

மதுரை நகர்க்குவாருங்கள் - என்றமெட்டு

இ-ம் சுருட்டி—தா-ஆதி

பல்லவி.

பேசாதிருப்பதழகோ பிராணநாதா (பே)

அநுபல்லவி.

நேசமனைவியாள்நான் நேரினில்வந்து நின்றும்
ஆசைமிகுமொழிகள் அளவில்லாமற்புகன்றும் (பே)

சரணம்

குற்றநானென்னசெய்தேன் கோபங்கொண்டதெதற்கு
உற்றதிவ்விதமென்றில் கோதுவீர் கேட்பதற்கு (பே)

தெரிந்துந் தெரியாமலும் செய்த பிழைமன்னித்து
வருந்துந் துயரந்தீர்ப்பீர். வதனத்தைக் கவனித்து (பே)

வ-ம்— நாதா! ஏனின்னுமென்னோடு பேசாதிருக்கிறீர்? நானென்ன குற்றஞ்செய்தேன்? மனமறிய ஓர் குற்றமுஞ் செய்யவில்லையே? மனைவியாகிய நான் தெரிந்துந்தெரியாமலும் குற்றஞ்செய்திருந்தாலும் கணவராகிய நீரன்றோ பொறுத்துக்கொள்ளக்கடமைப் பட்டவர். உம்மையல்லாது எனக்காதரவேது? என்மீது நீர் கோபங்கொள்வதற்கு நியாயமில்லையே? இவ்வேழைப் பெண் பரிதாபத்தைப் பார்த்துக் கிருபைசெய்து ஒரு வார்த்தை பேசலாகாதா? அவ்வளவு பாக்கியம் செய்யாத கொடியவள் நான் ஆவதற்குக் காரணமென்ன? அதையாவது சொல்லும்?

பாட்டு:— கைஸே நாஸே வாலே - என்ற மெட்டு.

இராகம்-தேசிகதோடி=தாளம்-ஆதி.

பல்லவி.

பதிலேனோ பேசாமல் மௌனமாக
இருக்கிறீர் துரையே சகிததிடேன்
நானே நெஞ்சம் சகித்திடேன்

அநுபல்லவி

நானிழைத்த குற்றம்யாது நாட இல்லால்வேறேது
நாவிணக்க மாயுரைக்க ஏன்மறுத்ததிப்போது(பே)

சரணம்

சண்டைக்கே நின்றபோது தடுத்தேனென்ற கோபமா
தாரணியி லேபெரியோ ரோதுமொரு சாபமா (பே)

சற்றுமுனைப் பிரியேனென்று சாற்றியசொல் மறந்தீரோ
தையலென்னை வையமீது நையவைத்துத் துறந்தீரோ (பே)

கையறுக்க வேளைவந்து காணுதற் கில்லாமலே
காலதாமதத்தினாலே கோபமா என்மேலே (பே)

வ-ம்— ஐயோ! இன்னும் என்னோடு பேசாதிருக்கிறீரோ? இது தர்மமாஓ ஒ! அறிந்தேன் அறிந்தேன் தாம் ஆதிநாளில் நான் யுத்தத்துக்குப் போகும்போது நிகும்பலையைப்பற்றி ஞாபகமூட்டச் சொல்லியிருந்தீரோ அதைப்பற்றி நான பிரஸ்தாபிக்கவில்லையென்ற கோபமே கொண்டிருக்கின்றீர் என்றுதெரிந்தேன் இந்த இருமானிடரையும் பல குரங்குகளையும் வெல்லுவதற்குச் சிரமசாத்தியமான நிகும்பலையாகத்தைச் செய்யவேண்டுமோ? எனது பிதா ஆதிசேஷனிடத்தில் நானொரு மொழிசொல்லுவேனானல் அவர் தமது விஷாக்கினி பொருந்

திய ஒரு மூச்சுக் காற்றினல் தமது எதிரிகளை ஒருகண நேரத்தில் பஸ்மீகரப் படுத்திவிடுவாரே. அதனை நான் மறந்தது குற்றந்தான் இப்பொழுதுமென்ன இதோ எனது பிதாவையழைக்கிறேன்.

(தலைசிரித்தல் லட்சுமணன் ஆவேசமுறல்)

ராமன்—தம்பி! பொறு, பொறு, பதறாதே.

சுலோ—நாதா! விபரஞ் சொல்லாமல் நகைக்கிறீரே இது ஞாயமா?

இந்திரசித்தன் தலை-வ-ம்—பெண்ணே! நீ ஒன்றுந்தெரியாமல் பேதமை மொழி ஓதுகிறாய், உன் பிதா எங்கேயிருக்கிறாரென்று அழைக்க முயன்றாய்? அதோ உனது எதிரே வில்லம்புங்கையுமாக நிற்கின்ற மகானுபாவரே உனது பிதா அவரே என்னைக் கொன்றவர்

(லட்சுமணன் சோகமுற்றுப் பூமியில் விழுதல்)

ராமர்—பாந்தவன் பூர்வஞான உணர்ச்சிகொண்டு சோகித்து விழுந்துவிட்டான் இனி நாம் சும்மா இருக்கலாகாது மாயலீலா மர்மத்தால் இவனது ஞான உணர்ச்சியை மாற்றிக்களையை நீக்குவிப்போம். தம்பி எழுந்திரு (எழுகிறான்)

பெண்ணே! சககமனத்துக்காக உனது கணவன் சிரசையெடுத்துக் கொண்டுபோ.

(சுலோசனை தலையையெடுத்துக்கொண்டு போகிறாள்)

மங்களம்.

பல்லவி.

| | |
|---|---|
| ஜெயவிஜய ராமன் | மங்களம் |
| சீதாதேவி | மங்களம் |

அநுபல்லவி.

| | |
|---|---|
| நயமொழி யிளைய லட்சுமணனுக்கு | மங்களம் |
| நாடு பரதர் சத்துருக்கர் | மங்களம் |
| இயல்வலியுள அநுமந்தன் | மங்களம் |
| இசைந்த நட்பு சுக்ரீவன | மங்களம் |

சரணம்.

| | |
|---|---|
| தத்துவ சுலோசனையு | மங்களம் |
| தகுதியுள்ள விபீஷணன | மங்களம் |
| முத்தியுற்ற பெரியோர் | மங்களம் |
| முனிவரொடுதவ விரத | மங்களம் |
| பாடல்பாடுமுயர் கவிஞர் | மங்களம் |
| பக்தாயோகர் ஞானசித்தர் | மங்களம் |
| கூடல்வாழும் நற்குணத்தர் | மங்களம் |
| குலவுமிச்சபையர்நித்த | மங்களம் |

சுலோசனசதி நாடகம் முற்றிற்று.

---